ஸ்ரீ ராமாநுஜன் 119

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசந ஸபையின் மூலமாக
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை
ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 10 | 1958ஆ நவம்பர்மீ விளம்பிஆ கார்த்திகைமீ | மலர் 11 |
|---|---|---|

# திருவாய்மொழி நூற்றந்தாதி - 11

வாயுந்திருமால் மறையநிற்க * ஆற்றாமை
போய்விஞ்சி மிக்க புலம்புதலாய் *—ஆய
அறியாதவற்றோ டணைந்தழுத மாறன் *
செறிவாரை நோக்குந் திணிந்து.

| | |
|---|---|
| வாயும் | (அடியார் அநுபவிக்கலாம்படி) கிட்டுகையையே ஸ்வபாவ மாக வுடைய |
| திருமால் | —ச்ரியப்பதியான எம்பெருமான் |
| மறைய நிற்க | (கண்ணுக்குப் புலப்படாமல் பிரிந்து மறைந்திருக்க (அதனாலே) |
| ஆற்றாமை போய் விஞ்சி | சோகம் அதிகரித்து |
| மிக்க புலம்புதல் ஆய் | மிகவும் அழும்படியான நிலைமை நேர்ந்து |
| ஆய அறியாத வற்றோடு | (அசேதனங்களாகையாலே தம்முடைய துக்கத்தை) ஆராய மாட்டாதவற்றை |
| அணைந்து | —கட்டிக்கொண்டு |
| அழுத | (அவற்றை ஸமதுக்க சாலிகளாகக் கொண்டு) அழுத |
| மாறன் | —ஆழ்வார் |
| செறிவாரை | —தம்மை வந்து பணியுமவர்களை |
| திணிந்து நோக்கும் | —திடமாகக் கடாக்ஷித்தருள்வர். |

மேன்மை நீர்மை வடிவழகு ஆகிய மூன்றும் குறைவின்றியே உண்டாய், அவதாரத்தில் பிற்பட்டவர்களு மிழக்கவேண்டாதபடி முகங்கொடுத்துக்கொண்டு நிற்கிற ஸ்தலமான அர்ச்சாவதார நிலங்களுட் சிறந்ததான திருக்குறுங்குடியிலே அநுபவிக்க ஆசைப்பட்டுக் கிடையாமையாலே கண்ணுஞ்சுழலையிட்டு, நாரை அன்றில் கடல் வாடை வானம் மதி இருள் கழி விளக்கு முதலான உலகப் பொருள்களும் தம்மைப்போலே பகவத் விரஹத்தாலே நோவு படுகிறனவாகக்கொண்டு அவற்றுக்குமாகத் தாம் நோவுபட்டுச் செல்லுகிறபடியைப் பேசினது * வாயுந்திரையுகளு மென்கிற (2-1.) இத்திருவாய்மொழி. இங்ஙனம் விலக்ஷணமான நிலைமையை யடைந்த நம்மாழ்வார் அடியார்களை பகவத் விச்லேஷம் நேராதபடி பரிபூர்ண கடாக்ஷஞ் செய்தருள்வ ரென்றதாயிற்று.

திருவாய்மொழியில் நம்மாழ்வார் எம்பெருமானை அநுபவிப்பது மிகவும் விலக்ஷணமாயிருக்கும். கீழ் முதற்பத்தில் ஒவ்வொரு திருவாய்மொழியிலும் எம்பெருமானுடைய ஒவ்வொரு குணத்தைப் பேசி அநுபவித்தார்; அவனுடைய பரத்துவத்தைப்பேசினார் முதற் பதிகத்தில்; அவன் பஜிக்கத்தகுந்தவனென்றார் இரண்டாம் பதிகத்தில்; அவன் அடியவர்

கட்கு எளியவன் என்றார் மூன்றாம் பதிகத்தில்; அவன் அடியவர்களது பிழைகளைப் பொறுக்குந்தன்மையனென்றார் நான்காம் பதிகத்தில்; பராத்பரனான தான் நம்போல்வாருடைய அற்பத்தனத்தைச் சிறிதுங் கணிசியாது தன்னைத் தாழவிட்டுக்கொண்டு நம்மோடு புரையறக் கலந்துபழகும் சீலகுணமுடையனென்றார் ஐந்தாம் பதிகத்தில்; நாம் இட்டதுகொண்டு த்ருப்தியடைபவனென்றார் ஆறாம் பதிகத்தில்; ஆச்ரயணத்தில் ஸௌலப்ய முடையனென்றார் ஏழாம் பதிகத்தில்; மனமொழிமெய்கள் மூன்றும் ஒருபடிப்பட்டிருத்தலாகிற ஆர்ஜவகுண முடைய னென்றார் எட்டாம் பதிகத்தில்; அடியார்களுக்குத் தன்னை அநுபவிப்பிக்குமிடத்தில் ஏககாலத்திலேயே பூர்ணநுபவங்கொடுத்துவிடுகையன்றியே பொறுக்கப் பொறுக்கச் சிறிது சிறிதாகக் கொடுக்குந்தன்மையனென்றார் ஒன்பதாம் பதிகத்தில். நிர்ஹேதுகமாகப் பரமோபகாரஞ்செய்தருள்பவனென்றார் பத்தாம்பதிகத்தில்.

ஆகவிப்படி பகவத்குணநுபவத்தில் ஆழங்காற்பட்ட ஆழ்வார் (2-1.) இத்திருவாய்மொழியில் தம்முடைய பகவத்விஷயாவகாஹநம் லோகவிலக்ஷண மென்பதைக் காட்டுகிறார். ஸம்ஸாரிகள் உலகத்திலுள்ளாரெல்லாரையும் தங்களைப் போலவே உண்டியே உடையே உகந்தோடுபவர்களாக நினைத்தல்போலே ஆழ்வாரும் உலகிலுள்ள ஸகல பதார்த்தங்களும் தம்மைப்போலவே எம்பெருமானைப் பிரிந்த வருத்தத்தினால் நோவுபடுகின்றனவாகக் கொண்டு, நாரை அன்றில் கடல் காற்று சந்திரன் முதலிய பதார்த்தங்களை நோக்கி அவற்றுக்குண்டான சில தன்மைகளை இயற்கையாகக் கருதாது பகவத் விச்லேஷவ்யஸநத்தினாலுண்டானவையாகக் கொண்டு அவற்றுக்குமாகத் தாம் அனுசோகிக்கிறார்.

நாரை முதலியவற்றையும் தம்மியல்பினவாக வெண்ணி ஒவ்வொன்றையும் நோக்கி 'நீயும் என்னைப்போலே பகவத்விஷயத்தில் ஆசைவைத்து விருப்பத்தின்படி கிடைக்கப் பெறாமையினாலே நோவுபட்டாயோ?' என்று பேசுகிறபடியாய்ச் செல்லுகின்றது இத் திருவாய்மொழி. அடியவர்களை இங்ஙனம் பிச்சேறப் பண்ணுமவன் எம்பெருமானென்று இதனால் அவனுடைய உந்மாதாவஹத்வமென்ற குணம் சொல்லப்பட்டதாகும்.

---

## திருவெஃகாவில் திருப்பணிகளும் திவ்ய மஹோத்ஸவமும்.

ஸ்ரீ காஞ்சீபுரியில் தேவப்பெருமாளுடைய திருவவதாரத்திற்கும் காரணபூதர் ஸ்ரீயதோக்தகாரியெம்பெருமான். இப்பெருமானுடைய ஸன்னிதியே திருவெஃகாவென்று திவ்ய ப்ரபந்தங்களில் வழங்கப்பட்டுள்ளது. இப்பெருமான் வேகா ஸேது வென்று வடமொழியில் திருநாமம் பெற்றவர். வேகா என்றது வேகவதி யென்றபடி; ஸேது என்று அணைக்குப் பெயர். * சதுமுகனார் வேள்விதனைச் சிதைர் கெடுக்கச் செறிந்தோடுங் கதியுடைய வேகவதிக்கு அணையாக வந்துதித்தோய்! * என்கிறபடியே நான்முகனுடைய அச்வமேத யாகத்தைச் சிதைர் கெடுப்பதற்காக ஸரஸ்வதி வேகவதீநதியாகப் பெருகினபோது வேள்வி கெடுதலடையாமைக்காகவும் வேகவதியின் வெள்ளம் மேலிட்டுச் செல்லாமைக்காகவும் குறுக்கே அணையாக சயனித்துக் கொண்ட பகவான் வேகாஸேது வென்று பெயர் பெற்றான். வேகாஸேது வென்னும் வடசொல்லே தமிழில் வெஃகணையாயிற்று. அதன் ஏக தேசமே வெஃகாவென்பது. இத்தலத்து எம்பெருமானுடைய ஸேவை மிக வற்புத மென்பதை அநுபவரஸிகர்கள் அறிவர்கள். சயன திருக்கோலத்தில் நிகரற்ற தலம் இது. பாண்டி நாட்டில் திருப்புளிங்குடியையும், தொண்டை நாட்டில் திருவெஃகாவையும் சயன

திருக்கோலத்தில் நிகரற்ற தலங்களாக அநுஸந்திப்பர் பெரியோர். *குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி, வடதிசை பின்பு காட்டித் தென்திசை யிலங்கை நோக்கி. அரங்கன் அரவணைத்துயிலுமழகி லீடுபட்டவர்களுங்கூட இத்திருவெஃகாவில் விலக்ஷண மாகவே யீடுபடும்படியிருக்கும்.

இத்தலம் மிகப்புராதனமாகையாலே ஜீர்ணோத்தாரணம் செய்ய ஆவச்யகதை ஏற்பட்டது. இரண்டொரு ஸம்வத்ஸரகாலமாக ஜீர்ணோத்தாரத் திருப்பணி விசேஷமாக நடைபெற்று வந்தது. இதற்கு முதன்முதலாக அரசாங்கத்தாருடைய உதவி மிகவும பரிகணநீயமான முறையில் ஏற்பட்டது. பிறகு பல பல மஹான்களும் பக்தர்களும் ஆந்தனையும் கைகாட்டினர்கள். ஏறக்குறைய பதினையாயிரம் ரூபாய் செலவில் திருப்பணி மிக விலக்ஷணமாக நடந்திருக்கிறது. இப்போது ஸன்னிதியின் சோபை அதிமாத்ரம் ஆகர்ஷகமாக விளங்குகின்றது.

காஞ்சியில் *நல்லப்பாதிருவம்சஸ்தர்கள் என்று ப்ரஸித்திபெற்ற மஹான்களின் ஆதீனத்திலுள்ளது இந்த தேவஸ்தானம். அவர்கள் தாம் முறைப்படி இந்த ஸன்னிதியின் கைங்கர்யங்களையும் நித்ய நைமித்திக மஹோத்ஸவங்களையும் சிறப்பாக நிர்வஹித்து வருகிறார்கள்.

சென்ற மாதத்தில் பொய்கையாழ்வாருடையவும் பிள்ளை லோகாசார்யருடையவும் வருஷோத்ஸவத்தை மிகச் சிறப்பாக நடத்திவைத்தார்கள். தினப்படி காலை வேளைகளில் ஆழ்வார்க்குத் திருவீதிப் புறப்பாடும் திருமஞ்சனமும் ஸேவை சாத்துமுறைகளும், மாலை வேளைகளில் நவராத்ரி ப்ரயுக்தமாகப் பெருமாளுக்கும் தாயருக்கும் திவ்ய மஹோத்ஸவமும், ஐப்பசியில் திருவோணமாகிய ஆழ்வார் சாத்துமுறை நன்னாளில் வையம்போற்றும் விசேஷ மஹோத்ஸவமும் கண்கொள்ளாக் காட்சியாக நடைபெற்றன.

சாத்துமுறையன்று ஒரு விசேஷம்;—இத்தலத்து எம்பெருமானுக்கும் பொய்கையாழ்வார்க்கும் அர்ச்சனைக்கு உரியதாக அஷ்டோத்தர சதநாமஸ்தோத்ரம் அமையவேணுமென்று தர்மகர்த்தா ஸ்வாமி பாரித்திருந்தார். அந்த வாசிக கைங்கரியத்தை எம்பெருமானும் ஆழ்வாரும் அடியேனைக் கொண்டு நிறைவேற்றியருளி யிருந்தார்கள். அவ்விரண்டு ஸ்தோத்ரங்களுக்கும் அரங்கேற்றமாக ஐப்பசியில் திருவோணத்தன்று மாலை 6-மணிக்கு திருப்பாவை சாத்துமுறை தீர்த்த விநியோகமான வுடனே அந்த ஸ்தோத்ரநாமாவளிகளையிட்டு எம்பெருமானுக்கும் ஆழ்வார்க்கும் அர்ச்சனை செய்விக்கலாயிற்று. பக்த பாகவதோத்தமர்கள் பெரிய திருவோலக்கமாக இருந்து அநுபவித்துக் களித்தார்கள். அன்று முதலாக அர்ச்சனை நாடோறும் நடைபெற்று வருகின்றது.

சென்னை க்ரௌன் டாகீஸ் தலைவரும் அனேக திவ்ய தேச கைங்கர்ய துரந்தருமான ஸ்ரீமான் M. V. நரஸிம்ஹுலு நாயுடு அவர்கள் இந்த சாத்துமுறை உபயக்காரராதலால் வழக்கப்படி வெகு சிறப்பாக நடத்திவைத்ததும் இங்குக் குறிப்பிடத்தக்கது. [அவருடைய வுருவப்படம் அடுத்த பக்கத்தில் காண்க.] இக்காலத்தில் திவ்ய தேசங்களில் இத்தகைய ஸம்ருத்தி ஏற்படுவது ப்ரபந்நஜந கூடஸ்தரான நம்மாழ்வார் * பொலிக பொலிக பொலிக வென்று என்றைக்கோ செய்த மங்களாசாஸனத்தின் பயன் என்று ஆஸ்திகர்கள் உகந்திருக்க ப்ராப்தம். ... ... ... ... ... (*)

## சென்னை ஸ்ரீமான் M. V. நரஸிம்முலு நாயுடு,

(ஸ்ரீகாஞ்சீ. பெரய்கையாழ்வார் சாத்துமுறை, மணவாளமாமுனிகள் சாத்துமுறை உபயக்காரர்,)



## ஸ்ரீ ராமாநுஜன் சந்தா செலுத்தியவர்கள்.

99. C. ராதாகிருஷ்ண முதலியார், மதராஸ்.
100. V. தீனதயாள நாயுடு ,,
101. M. நடராஜ செட்டி ,,
102. M. E. ஆழ்வார் முதலியார் ,,
103. C. வேணுகோபால் நாயுடு ,,
104. A. V. கன்னையய நாயுடு ,,
105. G. கன்னையய நாயுடு ,,
106 P. R. பக்தவத்ஸலம் மதராஸ்.
107. M. V. K. புருஷோத்தமம் ,,
108. S. R. ஸம்பத்து ஐயங்கார் ,,
109, N. லக்ஷ்மிநர்ஸு நாயுடு ,,
110. S. அமுதாச்சாரியார் ,,
111. S. A. சிங்காரம் பிள்ளை ,,

(99 முதல் 111 வரை நமது ஏஜண்டு ஸ்ரீமான் G. ரங்கைய நாயுடு மூலம் வரவுகள்)

112. R நடகோப ரெட்டியார், ஆலப்புழை
113. K. கண்ணுசாமி நாயுடு, கும்பகோணம்
114. அழகு ராமாநுஜன், மதுரை
115. M. S. கிருஷ்ணசாமி ஐயங்கார், மேலப்பாளையம்
116. K. வெங்கடராகவன், ஏர்ணாகுளம். Life Member.
117. V. A. ஐயங்கார், கல்யாண் (பாம்பே)
118. R. P. ராம ஐயங்கார், ஆழ்வார் திருநகரி
119 K. கோவிந்தசாமிப்பிள்ளை, நீடூர்
120. T. ராஜமய்யங்கார், மாயவரம்
121. எதிராஜ ராமாநுஜதாஸர், பிரான்குடி (குரனூர்)
122. P. S. ஸ்ரீனிவாஸாச்சாரியார், விசாகபட்டணம்
123. S: கிருஷ்ணசாமி ஐயங்கார், மேட்டூர்டேம்
124. C. R. ராமஸ்வாமி ஐயங்கார், B.A., B.L., கோயம்புத்தூர்.
125. B. பார்த்தஸாரதி ஐயங்கார், Bombay.

# மணவாளமாமுனிகளின் மஹோத்ஸவம். (P. B. A.)

அடியார்கள்வாழவும் அரங்கநகர்வாழவும் சடகோபன் தண்டமிழ்நூல்வாழவும் கடல் சூழ்ந்த மன்னுலகம்வாழவும் இம்மண்ணுலகில் திருவவதரித்த நம் மணவாளமாமுனிகளின் ஐப்பசித்திருமூலமஹோத்ஸவம் ஸகலதிவ்ய தேசங்களிலும் மிகச்சிறப்பாக நடைபெற்றாலும் ஸ்ரீகாஞ்சியில் தேவப்பெருமாள் ஸன்னிதியில் நடைபெறும் க்ரமம் லோகோத்தரமான தென்பது நாடுநகரமும் நன்கறிந்ததே. இந்தச்சிறப்பு அவரவர்கள் அநுபவித்தே அறிந்து கொள்ளத் தக்கதத்தனை. சுருங்கச்சொல்லில், உத்ஸவதினங்களாகிய பத்து நாட்களிலும் காலை வேளைகளில் 11-மணிமுதல் 4-மணிவரையிலும், மாலை வேளைகளில் 7-மணிமுதல் 11-மணி வரையிலும் பக்தவர்க்கங்கள் நலமந்தமில்லதோர் நாட்டில் திருமாமணி மண்டபத்தில் தாம் திகழ்வதாகவே நினைத்திருக்கும் நிலைமையாகும். * செவிக்கினிய செஞ்சொல் * என்று ப்ரஸித்தமான அருளிச்செயல் ஸேவை இவ்விடமொன்றிலேயே அந்வர்த்தமாயிருக்கும்.

### சாத்துமுறை நாளாகிய ஐப்பசித் திருமூல நன்னாளின் நிகழ்ச்சிகள்.

பின்மாலை 3-30-மணிமுதல் 5-மணிவரையில் நூற்றுக்கணக்கான ஸ்ரீவைஷ்ணவர்கள் திநசர்யா யதிராஜவிம்ஶதி ப்ரப்ருதி ஸ்தோத்ராநுஸந்தானத்துடன் திருவீதி வலம்வந்தார்கள். இந்த கோஷ்டி நமது வேத வேதாந்த வைஜயந்தீ வித்யாலயத்தின் நித்யக்ரமத்தில் சேர்ந்ததே யாயினும் இன்று நைமித்திக க்ரமத்தில் வெகு விசேஷமாக நடைபெற்றது.

அதன் பிறகு காலை 7-மணிமுதல் 10-மணிவரையில் ஸ்ரீயதோக்தகாரி யெம்பெருமான் ஸன்னிதி மணவாளமாமுனிகள் சேஷவாஹனத்தை யலங்கரித்து தேவப்பெருமாளுடைய திருவீதிகளுட்பட ஸகல வீதிகளிலும் மஹோத்ஸவம் கண்டருளினர். அதன்பிறகு தேவப் பெருமாள் திருமலையிலிருந்து இறங்கி அபிஷேகமண்டபத்திற்கு எழுந்தருளும் ஸந்தர்ப்பம் மிக மநோஹரமாய் அமைந்தது. உடனே 12-மணிமுதல் 2-மணிவரை மணவாள மாமுனிகளின் திருமஞ்சனம் நடைபெற்று க்ரமேண திவ்யப்ரபந்த ஸேவையாகி மாலை 7-மணிக்குத் திருப்பாவை சாத்துமுறைத் தீர்த்த ப்ரஸாத விநியோக கோஷ்டி தலைக்கட்டிற்று. உடனே தேவப்பெருமாளுடைய திருவீதிப்புறப்பாடு இரவு 8-மணிமுதல் 10-மணிவரை நடைபெற்றுப் பெருந்தேவித் தாயாருடனே மாமுனிகள் ஸன்னிதிக்கு எழுந்தருளி 11-மணிமுதல் பின்மாலை 5-மணிவரையில் க்ரமேண அருளிச்செயல் ஸேவையும் சாத்துமுறையும் தீர்த்தப்ரஸாத விநியோக கோஷ்டிகளும் நடைபெற்று, பெருமாள் தாயா ருடனே மாமுனிகள் புறப்பாடு கண்டருளி ஸன்னிதிக்குள்ளே யெழுந்தருளி பஹுமான வரிசைகள்பெற்று, காலை 7-மணிக்குத் தம்முடைய ஸந்நிதியிலே கந்தப்பொடி வஸந்தமஹோத் ஸவம் கண்டருளியாயிற்று. பிறகு பகல் 2-மணி முதல் இரவு 9-மணிவரை இயற்பா ஆயிர மும் ஸேவித்து இயல்சாத்துமுறை நடந்து மஹோத்ஸவ பரிபூர்த்தியாயிற்று.

இப்போது சிலவாண்டுகளாக இந்த தேவஸ்தானத்தில் எக்ஸிக்யூடிவ் ட்ரஸ்டி பதவியில் அமர்ந்திருக்கின்ற ப்ரஹ்மஸ்ரீ V. R. விச்வநாதன் அவர்கள் ஒருகுறையுமின்றி மிக்க ச்ரத்தை யோடு இம்மஹோத்ஸவத்தை லோகோத்தரமாகப் பரிமளிக்கும்படி உடனிருந்து நடத்தி வைத்த சிறப்பு விசேஷித்துப் போற்றத்தக்கது. இப்படியே இவருடைய கைங்கர்ய நிர்வாஹ ச்ரத்தை மேன்மேலும் ஓங்கி வளரவேணுமென்று ஆசாஸிக்கிறோம். இடையில் சில பல வருஷங்கள் இந்த தேவஸ்தானம் தாதாசார்ய வம்சஸ்தர்களின் ஆளுகையிலிருந்தபோது

ஆழ்வாராசாரியர்களின் உத்ஸவாதிகளை அறவே நிறுத்தியும் விசேஷித்து மணவாளமாமுனிகளின் மஹோத்ஸவத்திற்கு யாவச்சக்தி இடையூறுகளை விளைக்கப்பார்த்தும் செய்து போந்த அவத்யங்கள் அபரிமிதம். அஸங்க்யேயம் என்னத்தகுந்ததே யொழிய வேறில்லை. அக்காலத்தில் அவர்கள் நடத்திவந்த நடத்தைகளில் சிலவற்றை பக்தர்களுக்கு நினைப்பூட்டுகிறோம். மணவாளமாமுனிகளின் உத்ஸவம் நாளைக்குத் தொடக்கமென்றால் முன்னாள் முதலாகவே தேவஸ்தான ஜவான் ஒரு காகிதத்தை யெடுத்துக்கொண்டு வேளைதப்பாமல் மாமுனிகளின் ஸன்னிதிக்குவந்து ஸன்னிதியாதீனஸ்தர்களிடம் கொடுப்பதும் கையெழுத்து வாங்கிச் செல்வதுமாயிருக்கும். அந்த காகிதங்களில் என்ன எழுதப்பட்டிருக்கு மென்றால், "............... இன்றைக்கு; மணவாளமாமுனிகள் ஸன்னிதி வாசலில் பெரிய கொட்டகைப் பந்தல் போட்டிருப்பதாகத் தெரியவருகிறது; அதை உடனே பிரிக்கவேண்டியது" என்று ஒரு நாள்; "ஸன்னிதி வாசலில் மெழுகிக் கோலமிட்டிருப்பதாகத் தெரிகிறது; எங்களுக்குத் தெரிவியாமல் ஏன் இதைச் செய்தீர்களென்பதை 24-மணிக்குள் தெரிவிக்க வேண்டியது." என்று மற்றொருநாள். "ஸன்னிதி நிறைய மாவிலைத் தோரணங்களும் வாழைமரங்களும் கட்டியிருப்பதாகத் தெரிகிறது; இதற்கு என்ன காரணம் என்பதை மூன்று நாளைக்குள் தெரிவிக்கவேண்டியது" என்று வேறொருநாள். "விசேஷநாதஸ்வரக் கச்சேரிகளுடன் மணவாள மாமுனிகளுக்கு வெளிப்புறப்பாடு நடத்திவருகிறீர்கள்; அவரை மூலஸ்தானத்திலிருந்து அசைக்கவுங் கூடாதென்பதை இதனால் நீங்கள் அறிந்துகொள்ள வேண்டியது" என்று இன்னொருநாள். "இதுவரையில் நாங்கள் தெரிவித்தவைகளை லக்ஷியம் செய்யாமலே மிகவும் விஜ்ரும்பமாக நீங்கள் உத்ஸவத்தை நடத்திக்கொண்டு வருவதால் உங்களை ஏன் ஸஸ்பெண்ட் செய்யக்கூடாதென்பதை ஒரு வாரத்திற்குள் தெரிவிக்கவேண்டியது" என்று சாத்துமுறையன்று காகிதமனுப்புவர்கள். இப்படியாக வருஷம் தவறாமல் ஜவான்மூலமாகக் காகிதங்களை யெழுதி யனுப்புவதிலேயே கண்ணும் கருத்துமாயிருந்து காலங் கழித்து வந்தார்கள். இவ்வளவோடும் நில்லாமல் மற்றும் பலவகை அதர்க்கணச் செயல்களையும் செய்துவந்தார்கள். அவற்றை நாம் வரதன் ஸன்னிதிவரலாறு முதலிய சில நூல்களில் விரிவாக வரைந்திருப்பதை உலகமெல்லாம் பார்த்தே யிருக்கிறது. "அரசன் அன்று; தெய்வம் நின்று" என்னும் வசனத்தை மணவாளமாமுனிகள் தாம் அற்புதமாகப் பரிபாலனம் செய்தருள்பவர். 'ஆண்மூலம் அரசாளும்' என்ற பழமொழியின்படி விபவத்தோடு அர்ச்சையோடு வாசியற எஞ்ஞான்றும் ஸ்ரீவைஷ்ணவ வுலகை அரசாளும் ஆசார்யஸார்வபௌமர் நம் மணவாள மாமுனிகளே யாவர்.

மூலநக்ஷத்திரத்தைப்பற்றி வேதம் ஓதியிருப்பதை வைதிகர்கள் ஒவ்வொருவரும் நிச்சலும் சிந்தை செய்யவேண்டும். * உலுஜெஷாஉவூக்ஷாஜெதி। தநுலுவா ஹணீ * என்பது வேதவாக்கு. மாச்சரியமுள்ளவர்களை வேரோடேயறுப்பது மூலநக்ஷத்ரத்தின் பெருமையென்பதாம். இதுகாறும் வேரறுப்புண்டமை யறிந்துவைத்தும் அந்தோ இன்னமும் ஸ்வல்பஸ்தானத்தையுமிழக்கவே பாரித்து வருகிறார்கள். ... ... ... (*)

---

**ஆப்தர்களுக்கு அறிவிப்பு**

★

பன்னிரண்டு வருடங்களுக்கு முன்பு (அதாவது 1946-ஆம் வருடத்தில்) பரமார்த்தரக்ஷா என்றொரு பெரிய புத்தகம் வெளியிட்டிருந்தோம். அதில் பத்தெட்டு வியாஸங்கள் வெளிவந்தன. அப்புத்தகம் ஏழெட்டு வருஷ மாகவே துர்லபமாய் விட்டது. அதில் முக்கியமான மூன்று விஷயங் களைப் பல ஆப்தர்கள் அடிக்கடி விரும்பி நமக்குத் தெரிவிப்பதால் அன்னவர்களின் திருப்திக்காக இதன் கீழ் மூன்று வியாஸங்கள் மறு பதிப்புச் செய்யப்படுகின்றன. இவை யாவர்க்கும் பரம த்ருப்தி பயக்கும்.

# பெரியாழ்வார் திருமகள்

(ப்ர. அ.)

---

த்ரிவேணி யென்கிற ஆங்கில பத்திரிகையின் 1946ஞ் ஸெப்டம்பர் மீ வெளி யீட்டில் 'ஆண்டாள் யார்?' என்று மகுடம் புனைந்தவோர் வியாஸம் வெளிவந் துளது. அதை யெழுதினவர் C. R. என்று இவ்வளவே காண்கிறது. ஆண்டாள் யார்? என்கிற வினவுக்கு எவ்விதமான விடை யிறுக்கப்பட்டு முடிந்திருக்கிற தென்னில்; ஆண்டாள் பெரியாழ்வாருடைய நிஜபுத்திரியுமல்லள், வளர்த்த புதல் வியுமல்லள்; ஆண்டாளென்று ஒரு வ்யக்தி இருந்ததே கிடையாது; ஆழ்வார்கள் தங்களுடைய ஆண் தன்மையைவிட்டுப் பெண் தன்மையை யடைந்து பேசுகிற முறைமையும் ஒன்று உண்டாதலால் இந்த முறைமையைக் கைப்பற்றின பெரியாழ் வார் தம்முடைய மனோபாவனையையே ஒரு பெண்ணாக வைத்துப் பேசியிருக்கிறார். இது காவிய மனோபாவத்தின் கற்பனை யாகும்.—என்கிற இதுவே மேற்குறித்த ஆங்கில வியாஸத்தின் தேறின தாற்பரியம். இது C. R. என்பவருடைய தமது கற்பனையல்ல வென்றும், தம்முடைய மதிப்புக்குப் பாத்திரமான ஒரு நண்பரின் அபிப்பிராய மென்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

இது யாருடைய அபிப்ராயமானாலென்ன? சில வருஷங்களுக்கு முன்பு ஒரு தமிழ்ப் பத்திரிகையிலேயே இவ்வபிப்ராயம் வெளிவந்திருந்ததாகவும் நாம் சில நண்பர் முகமாகக் கேள்விப்படுகிறோம். இவ்வபிப்ராயம் சிறிதேனும் பொருத்த முடையதாக இருக்கவில்லையே. இதன் தத்துவத்தைப் பலர் அறிய விரும்புவதால் இங்கு இதைப்பற்றி நாம் விவரிக்கின்றோம்.

நம்மாழ்வாரும் திருமங்கை யாழ்வாரும் தங்களுடைய பக்திப் பெருங்காதல் புறவெள்ளமிடப் பெற்று அதனால் ஆண்மையை யிழந்து பெண்மையை யெய்தித் தாய் பாசுரமாகவும் மகள் பாசுரமாகவும் தோழி பாசுரமாகவும் பேசி யிருப்பது உண்மையே. அப்படிப்பேசுமிடங்களில் பதிகத்தை முடிக்கும்போது "குருகூர்ச் சடகோபன் சொன்ன" என்றும், "பரகாலன் கலியன் சொன்ன" என்றும் தம் முடைய சொந்த வாக்காகவே முடிப்பதுதான் காண்கிறது. அதனால் அப்பதிகத் தில் மகளாகக் கூறப்பட்டவர் ஆழ்வாரே யென்பது தேறும்.

இதே வகையில் பெரியாழ்வாரும் தம்முடைய சொந்தப் பிரபந்தமான [பெரியாழ்வார் திருமொழியென வழங்கும்] திவ்வியப் பிரபந்தத்தில் இரண்டு பதிகங்கள் பாடியுள்ளார். அவை மூன்றாவது நூறில் 7, 8 பதிகங்களாகும். அவை யிரண்டும் தாய்ப்பாசுரமாகவே பேசியவை. அவற்றில் பெரியாழ்வார் மகளாக வைக்கப்பட்டு அம்மகளினது ஈடுபாட்டைத் தாய் சொல்லி முறையிடுவதாக அமைத்திருக்கிறது. அவற்றுள் முதற்பதிகம் "ஐயபுழுதி யுடம்பளைந்து இவள் பேச்சு மலந்தலையாய்" என்று தொடங்குவது. இரண்டாவது பதிகம் "நல்லதோர் தாமரைப் பொய்கை நாண்மலர்மேல் பனிசோர, அல்லியுந் தாதுமுதிர்ந்திட்டு அழகழிந்தாலொத்ததாலோ, இல்லம் வெறியோடிற்றாலோ என்மகளை யெங்குங் காணேன், மல்லரை அட்டவன் பின்போய் மதுரைப்புறம் புக்காள் கொலோ" என்கிற பாசுரம் தொடங்கியுள்ளது. 'எனது மகள் என் வீட்டைவிட்டு எம்பெருமான் பின்னே போய்விட்டாள் போல் தெரியவருகிறது' என்று இதில் கூறப்படுகிறது. இப்பதிகத்திலேயே நான்காவது பாசுரம்—"ஒரு மகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால் திருமகள் போல வளர்த்தேன் செங்கண்மால்தான் கொண்டு போனான்" (3-8-1) என்பதாம்.

இப் பாசுரங்களை நோக்குமிடத்து, பெரியாழ்வார் தம்முடைய ஒரு பெண்பிள்ளையின் செய்தியை யெடுத்துக் கூறுவதாக மேலெழுந்த பார்வையில் தோன்றும். இப்படியே உண்மையாகச் சிலர் க்ரஹிப்பதுமுண்டு. '*ஒருமகள் தன்னையுடையேன் என்று பெரியாழ்வார் தாமே தமக்கு ஒரு பெண் இருந்ததாகவும் அவளைச் செங்கண்மால் கொண்டுபோனதாகவும் கூறுகிறார்' என்று ஹரிகதா காலக்ஷேபகாரர்கள் சிலர் கூறுவதுமுண்டு. இது மிகவும் தவறான கொள்கை. ஏனெனில்; இங்கு மகள் என்று சொல்லுவது ஸ்த்ரீ பாவனையை யடைந்த பெரியாழ்வாரையே யல்லது ஆண்டாளையன்று. ஆண்டாளைப்பற்றின ப்ரஸ்தாவம் இந்தப்பதிகங்களில் இல்லை. மேலே விவரித்த கொள்கையை த்ரிவேணியில் காணும் வியாஸம் கண்டிக்க எழுந்ததாகில் நாமும் அதில் சேர்ந்துகொள்ளுகிறோம்.

இங்குச் சிலர் கேட்கக்கூடும். ஆண்டாளென்றொரு வ்யக்தி இருந்ததேயில்லையென்று C. R. என்பவர் சொன்னாலும், பெரியாழ்வார் மகளாக ஆண்டாள் இருந்ததாகவே ஸித்தாந்த மாதலால் "ஒருமகள் தன்னையுடையேன்" என்கிற பாசுரமானது அத்திருமகளை நோக்கியே அவதரித்ததென்று கொண்டாலென்ன? பெரியாழ்வார் தம்முடைய பக்தியை வெளியிடுதல் போலவே தம்முடைய மகளின் பக்தியை வெளியிடவும் ப்ராப்தமாகையாலும், உண்மையில் தமக்கு பரமபக்தியே வடிவெடுத்த புதல்வி யொருத்தி இருக்கிறபடியாலும் அவளைப்பற்றியே "ஒருமகள் தன்னையுடையேன்" என்கிறபாசுரம் அவதரித்ததாகக் கொண்டால் பிசகு என்ன? என்று கேட்கக்கூடும்.

இதற்குச் சொல்லுகிறோம் கேண்மின். இப்பதிகத்தின் முடிவு பாசுரம் எங்ஙனே யுள்ளதென்று பார்க்க வேணும். "தாயவள் சொல்லிய சொல்லைத் தண்புதுவைப்பட்டன் சொன்ன" என்றன்றோ வுள்ளது. தாய்ப் பாசுரமாக வைத்துப் பெரியாழ்வார் தமது நிலைமையைத் தாம் பாடின பதிகம் என்றே இதற்குப் பொருளாதலால் இப்பதிகத்திலும் இதன் முற்பதிகத்திலும் பெரியாழ்வாரே மகளாக வைத்துப் பேசப்பட்டிருக்கின்றாரே யல்லது ஆண்டாளைப்பற்றின ப்ரஸ்தாவமே இங்குக் கிடையாதென்பது நிஸ்ஸந்தேஹம். த்ரிவேணி பத்திரிகையின் வியாஸம் இவ்விஷயத்தையெடுத்து விளக்கி யிருக்குமாயின் மிக நன்றாம். உலகமெல்லாம் இதை மெச்சும். ஆண்டாளுடைய பாசுரங்களாகத் திருப்பாவையென்றும் நாச்சியார் திருமொழியென்றும் இரண்டு திவ்வியப் பிரபந்தங்கள் பிரசித்தமாயிருக்க, அவற்றினுட்புகுந்து விஷய மருமங்களைச் சிறிதும் நோக்காமல் ஆண்டாளென்றொருவ்யக்தியே யிருந்ததில்லையென்றால் இதற்கு அர்த்தமுண்டோ?

திருப்பாவையின் முடிவு பாசுரத்தில் "பட்டர்பிரான் கோதை சொன்ன" என்றுள்ளது. அடுத்த நாச்சியார் திருமொழியின் பதினன்கு பதிகங்களிலும் முடிவில் "விட்டுசித்தன் கோதை சொன்ன" "குழற்கோதை கூறிய" "சுரும்பார் குழற் கோதை தொகுத்துரைத்த" "வில்லைத் துலைத்த புருவத்தாள் வேட்கையுற்று மிக விரும்புஞ்சொல்" என்றிங்ஙனே கூறி முடித்திருப்பதால் தனியே கோதை யென் ஞெரு பெண்மணி யிருந்தே தீரவேண்டும். இங்குப் பிறர் என்ன சொல்லக் கூடு மென்னில், திருப்பாவை யென்றும் நாச்சியார் திருமொழி யென்றும் இரண்டு பிரபந்தங்கள் இருப்பது வாஸ்தவமே; இவையும் பெரியாழ்வார் தாமே பாடியவை என்கிறோம்—என்று சொல்லக்கூடும். இது பொருந்தாதென்பதை நிரூபிக் கிறோம். பெரியாழ்வார் பாடியவை இரண்டு பிரபந்தங்களென்றும் ஆண்டாள் பாடியவை இரண்டு பிரபந்தங்களென்றும் உள்ள வ்யவஹாரத்தைத் தள்ளி, பெரியாழ்வாரருளியவை நான்கு பிரபந்தங்கள் என்று கொள்ளவேணுமென்பதே பிறருடைய கொள்கை யென்று தேறி நிற்கும். பெரியாழ்வார் திருப்பல்லாண் டிலும் அதற்கடுத்த திருமொழியிலும் பதிகந்தோறும் "விட்டுசித்தன் சொன்ன மாலை" "பட்டர்பிரான் சொன்ன பாடல்" என்றே கூறிவைத்து, திருப்பாவை யிலும் நாச்சியார் திருமொழியிலும் அங்ஙனங் கூருது "பட்டர்பிரான் கோதை சொன்ன" "விட்டுசித்தன் கோதைசொன்ன" என்றிப்படி கூறினது வஞ்சனையின் பாற்படுமன்றோ. இக்குற்றத்திற்கு ஆளாகார் பெரியார். பெரியாழ்வாரே பாவனை யின் கனத்தாற் பெண்மை யெய்தி இவை பாடினரென்னில், பிறவிடங்களிற் போலப் பட்டர்பிரான் பாடலாகவும் விட்டுசித்தன் சொல்லாகவுமே நிகமனப் பாசுரம் அமையுமே யல்லது "சுரும்பார் குழற்கோதை தொகுத் துரைத்த" என் றும் "வில்லைத் துலைத்த புருவத்தாள் விரும்பிய சொல்" என்றும் இவ்வகைகளி லேயே அமைந்திருப்பது பொருந்தாது. பெரியாழ்வாரே இப்படி மாறுபாடாக அமைத்தாரென்னில் அவரை வஞ்சனைக் குற்றத்திற்கு ஆளாக்க வேண்டியேவரும்.

நாச்சியார் திருமொழியினுட் புகுந்து நோக்குவோமாயின், பெரியாழ்வாரிற் காட்டில் வேறுபட்ட ஆண்டாள் என்னும் வ்யக்தி உள்ளபடி உண்டென்பது ஸ்பஷ்டமாகப் புலப்படும். மூன்றிடங்களெடுத்துக் காட்டுகிறோம். அத்திருமொழி யில் (10-4.) "கொல்லையரக்கியை மூக்கரிந்திட்ட,குமரனர், சொல்லும் பொய்யானல், நானும் பிறந்தமை பொய்யன்றே" என்றெரு பாசுரமுள்ளது. இதற்குப் பூருவா சார்யர்கள் என்ன பொருள் கூறியிருக்கிறார்களென்று தெரிந்துகொள்ள விரும்பி அவர்களது வியாக்கியானங்களை நாம் தேடவேண்டாம். வெறுந்தமிழர் முறையில் நாமே பார்ப்போம். இப்பாசுரத்திற்கு என்ன பொருள் சொல்லத் தகுமென்று ஒவ்வொரு தமிழரும் பார்க்கலாம். "நானும் பிறந்தமை பொய்யன்றே" என்ற வளவுக்குப் பொருள் உணரவேணும். விபீடணனை நோக்கிப் பெருமாள் கடற்கரை யிலே அபயமளித்தது அவனொருவனுக்கே யன்று; அவனை வியாஜமாகக்கொண்டு அவதரித்த சரமச்லோகமானது பக்தர்களெல்லாரும் தேறியிருப்பதற்குப்பாங்காகும். ஒருகால் அந்த வார்த்தை, பொய்யாக ஆய்விட்டாலுங்கூட [அதாவது, அவ்வழி யால் பேறு தவறினலுங்கூட] நானும் பிறந்தமை பொய்யன்றே=நான் ஒரு மஹா பாகவதருடைய பெண்ணாய்ப் பிறந்திருக்கிறேனே; இப்பிறப்பு பொய்யாகமாட் டாதே [அதாவது, இவ்வழியாலே பேறு தவறிப் போகமாட்டாதன்றோ] என்பதே இவ்விடத்திற்கு ஏற்ற பொருளாகும். இப்பாசுரத்தைக் கொண்ட பதிகத்தின் இறுதிப் பாசுரமும் இப்பொருளையே வற்புறுத்தும். அப்பாசுரமும் முக்கியமான தாகையால் அதனையும் விவரிக்கிறோம்:—

"நல்லவென் தோழி நாகணை மிசை நம்பார், செல்வர் பெரியர் சிறுமானிடவர் நாம் செய்வதென்?
வில்லிபுதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை, வல்லபரிசு வருவிப்பரேல் அதுகாண்டுமே."

இதன் தாற்பரியமாவது, என்னிழவுக்கு என்னைக் காட்டிலும் முன்னம் நோவுபடு கின்ற தோழியே! பராத்பரரான எம்பெருமான் ஒருவர்க்கு மெட்டவொண்ணாத பெருமையை யுடையராயிருப்பர்; நானோ 'நீசனேன் நிறையொன்றுமிலேன்' என்னும்படி சிறுமைக்கு எல்லை நிலமாயிருப்பவள். அவர்க்கும் எனக்கும் பர்வத பரமாணுக்களோட்டைவாசி போந்திருக்குமான பின்பு அவரைப் பெறுதற்கு நம்மாற் செய்யலாவதுண்டோ? ஆனாலும் எனக்குப் பேற்றுக்கு வழியுண்டுகாண். ஸர்வ வ்யாபகனை அப்பெருமானைத் தம் திருவுள்ளத்திலே யடக்கிக்கொண்டு அதனால் விஷ்ணுசித்தரென்று விருதுவஹிக்கும் நமது பெரியாழ்வார் தமக்குத் தேவராயிருக்கிற அப்பெருமானை ஓரிசையைச் சொல்லி யழைக்கவுமாம்; கிழியறுத்து வரப்பண்ணவுமாம்; திருமஞ்சனத்தைச் சேர்த்து வைத்து 'நாரணா! நீராட வாராய்' என்றழைக்கவுமாம்; திருக்குழல் பணியைச் சமைத்து வைத்துக் குழல்வார வாராய் என்றழைக்கவுமாம்; பூச்சூட வாராய் என்றழைக்கவுமாம்; திருவந்திக் காப்பிடவழைக்கவுமாம்; தமக்குப் புருஷகாரமானாரை முன்னிட்டு வரப்பண்ணவுமாம்; ஏதேனுமாக, அவர்க்கு ஸாத்யமான வொருவகையாலே வருவித்தாராகில் அவ்வழியாக அப்பெருமானை ஸேவிக்கப் பெறுவோம்; நம்முடைய சிறுமை காரணமாக நாம் இழக்கவேண்டியதில்லை; நமக்கு ஆசிரியரான பெரியாழ்வாருடைய வலிமையினால் நாம் பெற்றே தீருவோம்—என்பதாம்.

அன்றியும் (11 - 10) "செம்மையுடைய திருவரங்கர் தாம் பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்" என்கிற பாசுரமும் முக்கியமாகக் குறிக்கொள்ளத்தக்கது. எம்பெருமான் அர்ஜுந வ்யாஜத்தாலே திருத்தேர்த் தட்டிலே நின்றருளிச்செய்த யதார்த்தமான *மாமேகம் சரணம் வ்ரஜ* என்கிற சரம ச்லோகவார்த்தையை எங்கள் பெரியாழ்வார் கேட்டு தந்நிஷ்டராயிருப்பர் - என்பது இதன் பொருள்.

ஆக இப்பாசுரங்களைப் பெரியாழ்வார் தாமே எழுதிவைத்தாரென்னில், இது சிறிதும் பொருந்தமாட்டாதன்றோ. இப்பாசுரங்களை நோக்கின பின்பு கோதை அல்லது ஆண்டாளென்கிற வ்யக்தி தனிப்பட இல்லை யென்கிற வார்த்தை தோன்ற நியாயமில்லை.

ஆங்கில வியாஸத்தின் முடிவில் "இத்தகைய அபிப்பிராயம் தற்காலம் நாஸ்திக வாதம்போல் தோன்றலாம்; [நாஸ்திக வாதமன்று.] பெரியாழ்வார் ஆண்டாள் என்று இரண்டு வ்யக்திகளாகக் கொள்வதைவிட ஒரே வ்யக்தியிடத்தில் இந்த இரண்டு விசேஷணங்களையும் கொள்வது குறைவா?" என்று எழுதப்பட்டிருக்கிறது. இது சிறிதும் அர்த்தமில்லாத வார்த்தையே. இரண்டு வ்யக்திகளென்று ஐயமின்றி வ்யக்தமாகத் தெரிந்திருக்க, ஒரே வ்யக்தியாகக் கொள்வது பிசகன்றோ. எதைக்கொண்டு ஒரே வ்யக்தியாகக் கூறுவது? கூறுவதற்கு அற்பமான ஆதாரமாவது இருந்தால் கூறலாம். யுக்தியும் பிரமாணமும் சிறிதுமில்லையே.

ஆழ்வார்களுள் பொய்கையார் பூதத்தார் பேயார் திருமழிசையார் திருப்பாணனார் ஆகிய இவ்வைவரது பாடல்களில் இன்னார்பாடியதென்கிற குறிப்பேயில்லாமலிருக்கிறது. நம்மாழ்வாருடைய நான்கு பிரபந்தங்களுள் திருவாசிரியத்திலும் பெரிய திருவந்தாதியிலும் ஆழ்வார் பெயர் குறிப்பிடப்பெறுமலிருக்கிறது. திருமங்கையாழ்வார் பாடிய ஆறு பிரபந்தங்களுள் திருவெழு கூற்றிருக்கையிலும் இரண்டு திருமடல்களிலும் ஆழ்வார் பெயர் குறிப்பிடப்பெறுமலிருக்கிறது. இவற்றைக்கொண்டு நவீனர்கள் 'அந்தப் பிரபந்தம் அவர் பணித்ததன்று; இந்தப் பிரபந்தம் இவர் பணித்ததன்று.' என்று எதையாவது சொல்லியுமெழுதியும் போந்தால் 'பிராமாணிகர்களான பெரியார் ஏற்றுக்கொள்ளார்' என்கிற ஒரு வார்த்தை

யோடு முடிக்க வேண்டியிருக்கும். ப்ரக்ருத விவாத விஷயமோ, அப்படிப்பட்டதன்று. ஆண்டாளென்பாள் தனி வ்யக்தியேயென்பதற்கு நாம் கீழே காட்டியவை தவிர இன்னமும் பல காட்டுகிறோம்.

ஆண்டாளுடைய அவதார ஸ்தலமான ஸ்ரீ வில்லிபுத்தூர்க்கு நாச்சியார் திருமாளிகையென்றே பெயர்வழங்கி வருகின்றது. சூடிக்கொடுத்த நாச்சியாரென்று அவளுக்குத் திருநாமமாவதற்கு ஒரு ஐதிஹ்யம் ப்ரஸித்த மானது. அதனை வேதாந்த தேசிகரும் தாமருளிய கோதாஸ்துதியில் பலகாலெடுத்துக் கூறியுள்ளார். பிள்ளைப்பெருமாளையங்காரும் தமது பிரபந்தங்களிற் பேசியுள்ளார். திவ்யஸூரி சரிதம் குருபரம்பரா ப்ரபாவம் முதலான பல க்ரந்தங்களிலுமுள்ளது. அவ்வைதிஹ்யத்தின்படி நாளைக்கும் அத்தலத்தில் நாடோறும் காலையில் ஆண்டாள் சூடிக்களைந்த மாலையை மேளதாள மரியாதைகளுடன் வடபெருங்கோயிலுடையா னென்னும் பெருமாளுடைய ஸன்னிதிக்குக் கொண்டுபோய் ஸமர்ப்பிப்பது முதற் காரியமாக நடைபெற்று வருகின்றது.

ஆண்டாள் தனது திருமொழியில் "மாலிருஞ்சோலை நம்பிக்கு நான் நூறு தடாவில் வெண்ணெய் வாய் நேர்ந்து பராவிவைத்தேன், நூறுதடா நிறைந்த அக்காரவடிசில் சொன்னேன்" என்று கூறியிருந்ததை அப்படியே உண்மையான அனுட்டானமாக நடத்திவைத்து உடனே ஆண்டாளையும் ஸேவிக்க வெழுந்தருளின ஸ்ரீ ராமாநுஜரை ஆண்டாள் அர்ச்சாவதார ஸமாதியையுங் கடந்து எதிர்கொண்டுந்து 'எம் அண்ணரே!, என்று தழுவிக்கொள்ள அன்று முதலாகப் "பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே" என்று உலகமெல்லாம் வாழ்த்த நேர்ந்திருக்கின்றது. "கோதற்ற ஞானத் திருப்பாவைபாடிய பாவை தங்கை" என்றார் ஆன்றோரும்.

இப்படி இன்னமும் பல ஹேதுக்களுண்டு. ஆனால் இவையெல்லாம் ஸ்ரீ வைஷ்ணவர்களின் ஒரு ஸங்கேதமான ஐதிஹ்ய வாதங்கள் என்று பிறர் இலேசாகச் சொல்லிவிடவுங் கூடும். அப்படிச் சொல்லுமவர்களைத் திருத்த வேணுமென்கிற எண்ணம் நமக்குச் சிறிதுமில்லை. இவ்விஷயங்களில் நம்பிக்கையுள்ளவர்களுக்குத் தோன்றும் கலக்கங்களைப் பரிஹரிக்கவே நாம் இஃது எழுதினது. ஸ்ரீ ராமாயணத்தைப் பார்ப்பவர்கள் சிலர் 'ராமனும் அவதரித்ததில்லை, ஸீதையும் அவதரித்ததில்லை; ஸுக்ரீவாதிகளுமில்லை, ராவணாதிகளுமில்லை; நல்ல சில நீதிகளையுணர்த்துவதற்காகவே ராமாயணம் கற்பனை செய்யப்பட்டது' என்று கூறுமவர்களும் எழுதிவைத்திருப்பவர்களும் உளரன்றோ. அன்னவர்களைப் பற்றி நாம் என்ன செய்ய நினைப்போம்? ஒன்றுமில்லை. "கருவிலே திருவிலாதீர்! காலத்தைக் கழிக்கின்றீரே" என்கிற திருமாலைப் பாசுரத்தையே அநுஸந்தானஞ் செய்துநிற்போம்.

ப்ரக்ருத விஷயத்தில் ஐதிஹ்யங்களி லொன்றையும் இவர்கள் நம்பவேண்டா. நாச்சியார் திருமொழியிலுள்ள பாசுரங்கள் ஆண்டாளென்கிற வ்யக்தியை அவசியம் ஸ்தாபித்துத்தரும். "நானும் பிறந்தமை பொய்யன்றே" என்று அவள் கூறியிருந்தும் அவள் பிறந்தது பொய்யேயென்று கூறுவதுதான் ஆச்சரியம். *இதனில் மிக்கோராச்சர்யமுண்டே? ... ... ... *

ஆண்டாள் திருவடிகளே சரணம்.



# "பணியவிசைவில் திசைமுகன்"
# "ந நமேயம் து கஸ்யசித்"

(ப்ர-அ.)

(இதுவும் பழைய வியாஸம்.)

"பணியவிசைவில் திசைமுகன்தன் முடிகள் பத்து அறுத்தனே" என்பது தேசிகப்பிரபந்த மொன்றிலுள்ளதொருவார்த்தை. இங்கு சப்தத்தில் சிறு விசாரம், அர்த்தத்தில் பெரிய விசாரம். திசைமுகன் என்றிருக்கலாகாது, தசமுகன் என்றிருக்க வேணும்-என்று சிலர் மூலத்தைத் திருத்துவர். இந்தத் திருத்தம் வேண்டா; தச முகன் என்கிற சொல்போலவே திசைமுகன் என்கிற சொல்லும் இராவணனைக் கூறுமாதலால் - என்பது ஆன்றோர் கொள்கை. [திசைகள் பத்தாதலால் திசையென்னுஞ் சொல் பத்தென்கிற லக்கத்தைத் தெரிவித்தே தீருமென்க.] இது சப்த விசாரம். இதன் முடிவு எப்படியானாலும் நமக்கு விசாரமில்லை. இங்கு அர்த்தவிசாரமே முக்கியமானது. இராவணனுக்கு "பணிய இசைவில்லாதவன்" என்று விசேஷணம் கொடுக்கப்பட்டுள்ளது. யாரைப்பணிவதற்கு இசைய மாட்டாதவன்? என்று கேள்வி பிறக்கும். யாரையுமே பணிய இசையமாட்டாதவன் என்று கொள்வதே தகுதி. அந்த ராவணன்தானே "ந நமேயம் து கஸ்யசித்" [நான் யாரையுமே பணியமாட்டேன்] என்று ஸ்பஷ்டமாகக் கூறியிருப்பதனுல் அதற்குச் சேர, "பணிய விசைவில்" என்கிற இவ்விடத்திற்கும் உலகில் ஒருவரையுமே பணிய இசையமாட்டாத வென்றே பொருள் கொள்வது சுவையுடைத்தாம். இங்குச் சிலர் கூறுவதென்னெனில்; தசமுகனுடைய முடிகள் பத்தையு மறுத்த பெருமானைப் பற்றியே இங்கு ப்ரஸ்தாவமாதலால் இதற்குச்சேர, தன்னைப்பணிய இசையாதவென்று இவ்வளவேதான் சொல்லத்தகும். உலகத்திலுள்ள யாரையுமே பணியவிசையாத - என்று பொருள்கொள்ள இங்கு ஔசித்யமில்லை; அன்றியும், 'ந நமேயம் து கஸ்யசித்' என்கிற இராவணனுடைய வாக்கியத்தை ஆதாரமாகக் கொண்டு யாரையுமேபணிய விசையாதவன் என்கிறபொருள் பணிப்பதால் அந்த ஸ்ரீ ராமாயண ச்லோகத்தின் பொருளையே ஆராய்வோம்; கஸ்யசித் ந நமேயம் - ஒருவர்க்கும் நான் வணங்கமாட்டேன் என்று பொதுப்பட இருந்தாலும் பிரகரணத்திற்குச் சேர கஸ்யசித் என்பதற்கு இராமனைமாத்திரமே பொருளாகக் கொள்ள வேணும்; ஏனென்னில்; "விஷ்ணும் மந்யாமஹே ராமம் மாநுஷம் தேஹமாஸ்திதம், குருஷ்வ நரராஜேந ஸந்திம் ராமேணராவண!" என்று மால்யவான் கூற, அதற்கு மறு மாற்றம் கூறிவருகிற பிரகரணத்திலேயே 'ந நமேயம் து கஸ்யசித்' என்கிற விது இருப்பதால் இராமனேதான் இங்கு விவக்ஷிதன். இப்படியானல் 'ந நமேயம் து ராகவம்' என்றோ 'ந நமேயம் து தம் ரிபும்' என்றோ சொல்லியிருக்கலாமே, அப்படி ஏன்சொல்லவில்லை யென்னில், துராத்மாவான ராவணன் தன் வாயால் ராம நாமத்தையுச்சரிக்கக் கூசியே (ஜுகுப்ஸையினல்) ராகவம் என்னமல் 'கஸ்யசித்' என்ருன். என்று சிலருடைய கூற்று. இதைத்தழுவி உத்யாந பத்திரிகையில் வியாஸமொன்று வெளி வந்துள்ளது.

சுவை மிக்கதும் மிகப் பொருந்துவதுமான பொருளை ஈண்டு உபபாதிக்கிறேம். மால்யவான் இராவணனுக்கு ஹிதமாகச் சொன்ன வார்த்தையில் 'இராமனேடு நீ ஸந்தி செய்துகொள்' என்று சொல்லப்பட்டிருக்கிறதே யல்லது

'இராமனை நீ வணங்கு' என்று ப்ரணமப்ரஸ்தாவமே அதில் இல்லை. ப்ரணமம் செய்தே ஸந்தி செய்து கொள்ள வேணுமென்பது கிடையாது. இராவணனுக்கு உபதேசமளித்த பிராட்டியும் "தேந மைத்ரீ பவது தே" என்றும் "மித்ர மௌபயிகம் கர்த்தும் ராம:" என்றும் இராமனோடு தோழமை கொள்ளும்படி கூறினளே யல்லது வணங்கும்படி நியமிக்கவில்லை. அப்படியே மால்யவானும் ப்ரணமப்ரஸ்தாவமே செய்யாமலிருக்க *ந நமேயம் து கஸ்யசித்* என்று இராவணன் கூறினனென்றால், இது அர்த்தாத் தன்னுடைய திடமான மனவுறுதியை வெளியிட்டபடியே யென்று உணரவேணும். "ஏஷ மே ஸஹஜோ தோஷ: ஸ்வபாவோ துரதிக்ரம:" என்பதும் அவ்விடத்திலேயே அடுத்த வாக்கியம். இராமனை வணங்கமாட்டேனென்பதையா ஸஹஜதோஷமாகச் சொல்லுகிறானிங்கு. அல்ல; எப்படிப் பட்டவனையும் வணங்காமையே தனக்கு ஜந்மஸித்த மென்கிறானென்பதே பொருந்தும்.

'ராமன்பெயரைச் சொல்ல ஜுகுப்ஸித்து கஸ்யசித் என்றான்' என்பதும் ஸ்ரீராமாயணத்தோடு சேராது. 'குருஷ்வ நரராஜேந ஸந்திம் ராமேண ராவண" என்ற மால்யவானது வார்த்தைக்குப் பிறகு 'ந நமேயம் து கஸ்யசித்' என்றதற்கு முன்னும் பின்னும் இராவணன் எத்தனைதடவை ராம நாமக்ரஹணம் பண்ணியிருக்கிறானென்பதை ஸ்ரீராமாயணம் ஸேவித்தவர்கள் அறிவார்கள். யுத்த காண்டத்தில் முப்பத்தைந்தாவது ஸர்க்கத்தின் முடிவிலுள்ளது மால்யவானுடைய வார்த்தை. அதன் பிறகு முப்பத்தாறுவது ஸர்க்கத்தில் பதின்மூன்றாவது ச்லோகம் வரையில் கண் செலுத்திப் பார்க்க. "மாநுஷம் க்ருபணம் ராமம்" என்றும், "நிமர்த்தம் ப்ரதிதாஸ்யாமி ராகவஸ்ய" என்றும், "பச்ய கைச்சித்தஹோபிஸ் த்வம் ராகவம் நிஹதம் மயா" என்றும் "ராமேண விஸ்மய: கோத்ய" என்றும் "ராமஸ் ஸஹ வாநரஸேநயா" என்று மிங்ஙனே ராமநாமக்ரஹணமயமாகவே யன்றோ வுள்ளது. ஆகவே ஜுகுப்ஸையினால் ராமநாமக்ரஹணம் செய்திலன் என்று சொல்வது பிசகு; ராம மாத்ர விவக்ஷையின்றிக்கே ஸர்வவிவக்ஷை யிருந்தபடியால்தான் 'ந கஸ்யசித் நமேயம்' என்றான். 'யாரை வணங்க மாட்டேனென்கிறானென்று கேள்வி பிறந்தால், ப்ரக்ருதத்தில் ஸ்ரீராமன் உபஸ்திதனாயிருக்க அவ் விராமனைவிட்டு அநுபஸ்திதர்களான ஸகலரையும் இங்கே கொண்டு கூட்டிக்கொள்வது அந்யாய்யம்' என் கிறார்கள். இதுவும் தவறு. இராமனை விட்டதாக எது கொண்டு கூறுவது? 'இராமபிரானை வணங்குவேன், மற்றையோர்களை வணங்கமாட்டேனென்கிறானிராவணன்' என்று யாரும் சொல்லவில்லையே. அநுக்தோபாலம்ப மன்றோவிது. இராமன்தவிர மற்றையோர்களுக்கு இங்கு உபஸ்திதியில்லை யென்பதும் தவறு. சாஸ்த்ரஜ்ஞர்கள் சொல்லக்கூடிய வார்த்தையன்றிது. "பகவான் அபராதிஜநசிக்ஷகன்" என்றால், யாரிடத்தில் அபராதப் படுகிறவர்களை சிக்ஷிப்பவன்? என்று கேள்வி பிறக்கும். இந்த வாக்கியத்தில் பகவான் மாத்திரமே உபஸ்திதனா யிருப்பதால் அவனிடத்தில் அபராதப் படுமவர்களே இங்கு விவக்ஷிதர்களாக வேணும் என்று யாரேனும் சொல்ல முடியுமோ? வஸ்துத: எவ்வெவர் விஷயத்தில் அபராதப்பட்டிருப்பதுண்டோ அவர்கள் அனைவரும் இங்கு அஸங்கோசேந க்ராஹ்யர்களாகக் குறையில்லை.

முதல் திருவந்தாதியில் "வரத்தால் வலி நினைந்து மாதவ! நின்பாதம் சிரத்தால் வணங்கானமென்றே? உரத்தினால் ஈரரியாய் நேர் வலியோனாய விரணியனை, ஓரரியாய் நீ யிடந்ததூன்' என்பது ஆச்சரியமானவொரு பாசுரம். (90) எம்பெருமான், தன்னளவில் யார் எவ்வளவு அபராதப் பட்டாலும் அதைச் சிறிதும் கணிசிப்பவனல்லன் என்பது இப்பாட்டில் மிக இனிதாகச் சொல்லப்பட்டது. இதைக்

கூரத் தாழ்வான் "யதபராத ஸஹஸ்ர மஜஸ்ரஜம்" என்கிற (வரதாஜஸ்தவ) ச்லோக ரத்நத்தினால் விவரித்தருளினர். தன்னை வணங்காதவர்களைப் பகவான் தலையறுப்பவன் என்று பிறர் கூறும் பொருள் எம்பெருமான் திருவுள்ளத்திற்குச் சிறிதும் பொருந்தாது; ரஸலேசமு மற்றது. சாஸ்த்ரார்த்தமுமன்று.

"லோகநாத! பகவந்! க்ஷிதிலோகே மாம் நிதேஹி ஸுசிரம் க்ருபயாத்ர" என்று ஒரு பக்தன் பகவானை நோக்கி வேண்டுகிறான். லோகநாதனை பகவானே! என்னை இந்தப் பூலோகத்தில் நீ நெடுநாளைக்கு வைத்திருக்க வேணுமென்பது இங்குப் பிரார்த்தனை. இங்கே லோகநாத! என்றானே; எந்த லோகத்திற்கு நாதனென்று விவக்ஷிதமென்று கேட்டால், 'க்ஷிதிலோகே மாம் நிதேஹி' என்று இந்தவாக்கியத்தில் நிலவுலக ப்ரஸ்தாவமே யிருப்பதால் இதற்குச்சேர லோக நாத! என்பதற்குப் பூலோக நாதனே! என்று தான் அர்த்தம் கொள்ள வேணும்; ஸர்வலோகநாதனே! என்று கொள்ளவே கூடாது என்று சொல்லுவாருளரோ? உண்மையில் பகவான் ஸர்வலோக நாதத்வத்திற்குக் கொள்கலமாயிருப்பவனானதால் அதை ஸங்கோசிப்பதற்கு எந்த ப்ரமாணமுமசக்தமாகாது. ஸம்பாவிதமான உத்கர்ஷத்தைச் சிறிதும் குறைக்க வொண்ணாதாகையாலே. அது போலவே, ந நமேயம் து கஸ்யசித் என்று மார்புதட்டிக்கூறின ராவணன் தனக்கு எவ்வளவு அம்சத்தைப் பெருமையாக நினைத்திருக்கிறானோ அவ்வளவும் இங்குத் தேறி நிற்கவேணுமே. தேறும்படியாகவே அவன் பதப்ரயோகம் பண்ணியிருக்க, அந்தச் சுவடறியாதே அரஸிகர்கள் பேசுவதும் ஒரு பேச்சோ? மால்யவானுக்கு மறுமொழி கூறுகின்ற ராவணன் இராமனை ஒரு க்ஷுத்ரனை காபுருஷனைக இட்டன்றோ பேசி வருகிறான்; இவனை நோக்கி வணங்காமையை அவன் தனக்கு ஒரு பெருமையாக நினைப்பனோ? இந்த ப்ரஸ்தாவத்தில், தனக்குள்ள முழுப் பெருமையை வெளியிடுவதன்றோ ராவணனுக்கு உத்தேச்யம். 'மால்யவானே! இந்த அற்பனான ராமன் கிடக்கட்டும்; இவனிலும் எத்தனையோ மடங்கு மேம்பட்ட தேவாதிதேவர்களுக்கும் என் தலை வணங்காதுகாண்' என்று விவக்ஷித்தல்லவோ 'ந நமேயம் து கஸ்யசித்' என்றது. அவனுடைய உண்மைச் செருக்குக்கு உரியபடியாகவன்றோ பொருள் கூறவேண்டும்.

இராவணன் பிராட்டியை வணங்கினதாக ஆரண்ய காண்டத்தில் வால்மீகியும் கம்பனும் ஸ்பஷ்டமாகக் கூறியிருப்பதாகக் கொண்டு பிறர் வரைந்திருக்குமதும் விரஸம். பிராட்டியின் ஸௌந்தர்யத்திலீடுபட்டு வணங்கினானென்றும அந்தோ! எழுதுகிறார்கள். "நாஹம் ஜாநாமி கேயூரே நாஹம் ஜாநாமி குண்டலே, நூபுரே த்வபிஜாநாமி நித்யம் பாதாபிவந்தநாத்." என்ற இளைய பெருமாளைப் போன்று பரமபக்தி ப்ரகர்ஷ ப்ரேரிதனாயோ வணங்கினான்? காமவெறி கொண்டு க்ருத்யாக்ருத்யவிவேகாந்தனாய்ச் செய்த காரியத்தை ஒரு காரியமாக எடுத்துக் கூறுவது முண்டோ? "மஹ்யம் நமோஸ்து சுவயே நிரபத்ரபாய" என்கிற ஸ்ரீஸூக்தியைக்கண்டு 'இதென்ன அநீதி! ஆளவந்தார் தம்மைத்தாமே தொழுது கொள்ளுகிறாரே!' என்று வயிறுபிடித்தாராம் ஒரு மஹாப்ராஜ்ஞர்: தஸ்யைவாஸௌ ஸஹோதர:.

அர்த்தாத் ப்ரஸக்தமான இந்த ச்லோகத்தின் பாஷ்யத்தில் ஸ்வாமி தேசிகன் அருளிச் செய்துள்ள ஆச்சரியமான வொரு விஷயத்தையும் நினைப்பூட்டுகிறோம். இங்கு "மஹ்யம் நமோஸ்து கவயே" என்றுள்ளது. இந்த நமஸ்காரத்திற்குக் கர்த்தா யார்? என்று கேட்டால் ஆளவந்தார்தாம் என்றே ஒவ்வொரு வித்வானுக்கும் தோன்றும். தேசிகன் இங்கு அருளிச் செய்வது பாரீர்; "நமோஸ்து இதி ஸாமாந்யோக்த்யா ஸர்வை: க்ரியமாணம் நமோ மஹ்யமேவாஸ்து, கிமந்யேந ஸர்வேச்வரேண? இதி வ்யஜ்யதே." என்றருளியுள்ளார்.

உலகில் அவரவர்கள் யாவரும் செய்யும் நமஸ்காரமெல்லாம் எனக்கே யாகுக வென்று ஆளவந்தார் கூறுவதாகவன்றே தேசிகன் அர்த்தம் காட்டியுள்ளார். ஸுபாஷிதநீவியின் முதல் ச்லோகத்திலும் இவ்வர்த்தமே அறியத்தக்கது. இதில் என்ன ரஸபரிபோஷமென்பதையும் இவர்கள் ஆராயவேணுமே. * ந நமேயம் * என்ற விடத்தில் கர்மவிசாரம்; *மஹ்யம் நமோஸ்து* என்ற இடத்தில் கர்த்ரு விசாரம்; இவ்வளவே வாசி.

*ந நமேயம் து கஸ்யசித் * என்றவிடத்தில் எவரையும் பணியேன் என்று பொருள்கொள்வதில் என்ன ரஸவிசேஷம்? இராமனைப் பணியேனென்று பொருள் கொள்வதில் என்ன ரஸ பங்கம்? என்று கேட்கிறார்கள். எந்த வாக்யத்திற்கு எவன் வக்தாவோ அந்த வாக்கியத்திற்கு அவனுடைய ஹ்ருதயாநுஸாரமாக வன்றே அர்த்தத்தில் ரஸபரிபோஷம் அறுதியிடத்தக்கது; ப்ரக்ருதம் *ந நமேயம்* என்ற வாக்யத்திற்கு வக்தா இராவணன். அவன் தன் மனத்தால் தனக்கு வைபவமாக அபிமானிப்பது தேவகந்தர்வமநுஷ்யாதிகள் யாவராலும் தானொருவனே வணங்கத் தக்கவனென்றும் தான் ஒருவனையும் வணங்கத் தகாதவனென்றும் இதையே. இப்பொருளைக் கொள்ளாமையே ரஸபங்கம்.

ஒன்று பாருங்கள். 'இந்த ச்லோகத்தின் பொருள் எவனுக்கும் தெரியாது' என்கிறாரொருவர். 'இந்த ச்லோகத்தின் பொருள் எவனுக்கும் தெரியும்' என்கிறார் மற்றொருவர். 'எவனுக்கும்' என்கிற வாசகம் இரண்டிடத்திலும் சொல் வகையில் துல்யமாக இருந்தாலும் பொருள் வகையில் நெடுவாசியுண்டு. முந்தின வார்த்தையில் எவனுக்கும் தெரியாதென்றது—எப்படிப்பட்ட மஹாவித்துவானுக்கும் தெரியாதென்றபடி. பிந்தின வார்த்தையில், எவனுக்கும் தெரியுமென்றது—எப்படிப்பட்ட அறிவிலிக்கும் தெரியுமென்றபடி. உலகில் இது ஸர்வஜந நிர்விவாதமான வ்யுத்பத்தி. இராவணன் எவனையும் வணங்கான்—விபீஷணன் எவனையும் வணங்குவன்—என்கிற இரண்டு வாக்யங்களைக் கொள்வோம். முந்தின வாக்யத்தில் எவனையும் என்பதற்கு—பரமபத நாதனையும் என்பதே அர்த்தமாகும். பிந்தின வாக்யத்தில் எவனையுமென்பதற்கு—ஒரு சிறுவனையும் என்பதே அர்த்தமாகும். இப்படியல்லவென்று ஒரு விவேகியாலும் மறுக்கவொண்ணாது. இவ்வண்ணமாகவே * ந நமேயம் து கஸ்யசித் * என்ற ப்ரக்ருதஸ்தலத்திலும் இந்த்ர சந்த்ர வருண குபேர சதுர்முக பஞ்சமுக ஷண்முக ப்ரப்ருதிகளில் எவரையும் வணங்கமாட்டேனென்பதுவே பொருளாகும். அதற்குச் சேர * பணியவிசைவில் * என்ற பாசுரத்திலும் அப்பொருளேதான் பொருந்தும்; அதுவேதான் ரஸவத்தரம். வேறுவிதமான பொருள் விவேகிகளின் உள்ளத்தில் உதிக்கக்கூடியதே யன்று என்பது சிலாலிகிதம். ... ... ... ... ... *

# அத்ருஷ்டார்த்த பரமார்த்தம்

அத்ருஷ்டார்த்தமென்று ஒரு வகுப்பினர் செய்து வருகிற காரியம் நல்ல காரியமேயன்றிக் கெட்ட காரியமல்ல. ஒரு ஆசார்யரை முன்னிட்டு எம்பெருமானை யடிபணிவதென்னு மிக்காரியத்தைக் கண்டிக்கவேண்டிய அவசியமே கிடையாது. ஆனால் தாங்கள் செய்கிற இக்காரியத்தைப் பிறர் செய்யவில்லையென்று கொண்டு அதற்காகப் பிறரை நிந்திக்கத் தலைப்பட்டதனால் இதில் நாம் தலையிட்டு விஷயங்களைச் சோதிக்க நேர்ந்தது. ஒன்று பார்க்க. ஒரு ஸம்பிரதாயத்தில் அநேகாவ்ருத்திப்ரணமம் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். இதில் என்ன பிசகு? நம்முடைய கரணக்ராமங்கள் பகவானை வழிபடுவதற்கே யேற்பட்டவை. நமஸ்கரிப்பதென்பது மிக நல்ல காரியம். இரவும் பகலும் அதை ஓயாது செய்து கொண்டிருந்தாலும் இது நீதியே யொழிய அநீதியன்று. இதைக் கண்டிக்க வேண்டிய அவசியமேயில்லை. இது செய்பவர்கள் பிறருடைய அனுஷ்டானத்தை இகழ்வதனாலேயே இவ் விஷயத்திலும் ஆராய்ச்சி காட்டி சாஸ்த்ரார்த்த நிஷ்கர்ஷம் செய்யப் ப்ராப்தமாகிறது. "ஜாத்யாச்ரமதீக்ஷைகளில் பேதிக்கும் தர்மங்கள் போலே" என்று ஆசார்ய ஹ்ருதயத்திலருளிச் செய்தபடி ஜாதிக்குத் தக்கபடியும் ஆச்ரமத்திற்குத் தக்கபடியும் தீக்ஷாதிகளுக்குத் தக்கபடியும் கர்மங்கள் (அவரவர்கள் செய்யுமனுஷ்டானங்கள்) உச்சாவசமாக இருக்குமாதலால் அதிகார பேதப்ரயுக்தமாக அவரவர்கள் கொள்ளும் ஆசரணைகளில் பிறர் குற்றங்குறை கூறுவது உசிதமன்று. வைதிக கார்யங்களில் "ஸக்ருத் அபிகார்ய, த்வி: அவதாய" என்கிற வாக்யம் ஸுப்ரஸித்தமே. இதன் அர்த்தம் வைதிகர்கட்குத் தெரியும். அபிகாரம் ஒரு தடவை செய்வானேன்? அவதானம் இருமுறை செய்வானேன்? என்று ஆக்ஷேபிப்பாரில்லை. இந்த அவதானமும் சில கோத்ரிகளுக்கு ஸக்ருத் என்றும் சில கோத்ரிகளுக்கு அஸக்ருத் என்றும் அநாதியான ஆசாரம் காண்கிறது. ஸக்ருத் செய்பவர்கள் அஸக்ருத் செய்பவர்களை நிந்திப்பதில்லை. அஸக்ருத் செய்பவர்கள் ஸக்ருத் செய்பவர்களை நிந்திப்பதில்லை. இவ்வண்ணமாகவே எந்த அநுஷ்டானத்திலும் ஒரு வகுப்பினர் மற்றொரு வகுப்பினரை இகழ ஔசித்யமேயில்லை. ஆஸ்திகர்களாய் சாஸ்த்ர சரணர்களா யுள்ளவர்கள் சாஸ்த்ரத்தை முன்னிட்டோ பூர்வபூர்வ பரம்பரையை முன்னிட்டோ செய்து போருமனுஷ்டானங்களில் நமக்கென்ன விசாரமென்று வாளாகிடக்கவேண்டுமே யல்லது தூஷிக்கப் புகுவது சிறிதும் யுக்தமன்று. ஆகவே இதர ஸம்ப்ரதாயஸ்தர்கள் செய்து போரும் சரணாகதியநுஷ்டானத்தில் நாம் தலையிட்டு அவத்யம் கூற அணுமாத்ரமும் அவகாசம் கிடையாது. அப்படியிருந்தும் இதில் சர்ச்சை நேர்ந்தது எதனாலென்னில்; இந்த அத்ருஷ்டார்த்தத்தை நடத்தும் வகுப்பினர் இதனைப் பிறர் செய்வதில்லையென்று தூஷித்தது காரணமாகவே யென்க; நம்முடைய அத்ருஷ்டார்த்த ஸர்வஸ்வக்ரந்தத்தின் அவதாரிகையில் இது விசதம்.

சரணாகதி யநுஷ்டானம் ஒரேயொரு நாளல்ல; யாவஜ்ஜீவம் நிச்சலும் த்ரிஸந்த்யமும் செய்து கொண்டிருந்தாலும் இக்காரியம் நல்லதே யொழியத் தீயதன்று என்பதை மீண்டும் சொல்லுவோம். இதற்கு தேசிக ஸூக்தி யநுக்ரஹமில்லையே என்பதுதான் இங்கு விஷயம். ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ஸாங்க ப்ரபதநாதிகாரத்தில் "த்வயத்தின் ஆசார்யோச்சாரண அநூச்சாரணத்தாலே ப்ரபத்தியநுஷ்டானம் பிறந்தபின்பு" என்று ஸாதித்திருப்பதை நாம் எத்தனை தடவையெடுத்துக்காட்டினாலும் இதற்கு ஏதாவது பதில் உண்டோ? அவ்வளவேயன்று; இதற்குமேல் உபாயாநுஷ்டானமாகக் கர்த்தவ்ய சேஷம் வேறொன்றுமில்லையென்றும் தேசிகன் ஸ்வஹஸ்தேந - ஸ்வகீய ஸ்ரீஹஸ்தேந எழுதியருளி

யுள்ளார். இதைத் தொடாமலே இவர்களுடைய ப்ரஸங்கங்கள் நடந்து வருகின்றன. ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்திற்கே இப்படி ஜலாஞ்ஜலியானபோது மற்ற க்ரந்தங்களைப்பற்றிச் சொல்லவும் வேணுமோ?

ந்யாஸதிலகமென்கிற திவ்யக்ரந்தம் ப்ரபத்தியின் ஸ்வரூபஸ்வபாவாதிகளை சோதித்து நிஷ்கர்ஷிப்பதற்கென்றே அவதரித்தது. அதில் *அந்தோநந்த க்ரஹணவசக: *உக்த்யா தநஞ்ஜய விபீஷண லக்ஷ்யயா*என்கிற இரண்டு ச்லோகங்களும் கலக்கங்களைப் போக்கி நல்ல தெளிவு பிறப்பிக்குமவை. ப்ராப்யத்தைப் பெறுவதற்கு ஸ்வத: சக்தி யற்றவொருவன் பிறருடைய துணையினால் தாராளமாகப் பெறுவான் என்பதற்கு*அந்தோநந்த ச்லோகத்தில் மூன்று த்ருஷ்டாந்தங்கள் காட்டியுள்ளார். கண்ணில்லாத குருடனையும் காலில்லாத முடவனையும் பூர்வார்த்தத்தில் காட்டிவிட்டு மூன்றாவது பாதத்தில் "புங்க்தே போகாந் அவிதிதந்ருப: ஸேவகஸ்ய அர்ப்பகாதி:" என்றொரு ஆச்சரியமான த்ருஷ்டாந்தம் காட்டியருளுகிறார். ஒரு மஹாராஜனிடத்திலே ஒரு அமாத்யன் நெடுநாள் ஸேவைபண்ணி அநவதிகமான பொருளைத் திரட்டி நிதியாகச் சேமித்து வைத்து விடுகிறான். அதனை அந்த அமாத்யனுடைய வம்ச பரம்பரையில் தோன்றினரெல்லாரும் நீண்ட காலம் அநுபவித்து வருகிறார்கள். அவர்கள் அந்த த்ரவ்யத்தை முதன் முதலாகக் கொடுத்த மஹாராஜனையும் பார்த்தவர்களல்லர், பணிவிடைகள் செய்து அதனைப் பெற்ற ஸ்வகுல கூடஸ்தனை அமாத்யனையும் பார்த்தவர்களல்லர்; அவனுடைய பரம்பரையில் தோன்றினவர்கள் என்கிற வொரு காரணங்கொண்டே அப்பொருளை நிராபாதமாக அநுபவித்து வருகிறார்கள். இது ஸர்வஜநீநமாக உலகில் காணும் விஷயம். இதனையே முக்கிய த்ருஷ்டாந்தமாகக் காட்டுகிறார் தேசிகன். இது எதற்காகக் காட்டப்பட்டதென்பதைச் சிறிதும் ஆலோசிப்பாரில்லையே. நாம் மிக விளக்கமாக வெடுத்துக்காட்டியும் அந்தோ! க்ரஹிப்பாருமில்லையே. மஹாராஜ ஸ்தானத்தில் ஸ்ரீரங்கநாதனை வைத்து, அமாத்ய ஸ்தானத்தில் ஸ்ரீராமாநுஜரைவைத்து தத்வம்ச பரம்பரையில் தோன்றின ப்ரஜைகளின் ஸ்தானத்தில் தம்மை வைத்துப் பேசுகிறார். ஸ்ரீராமாநுஜ ஸம்பந்தமொன்றே தமக்குப் பேற்றுக்குடல் என்று நிஷ்கர்ஷிக்கிறார். அமாத்யன் பொருளீட்டினது வாஸ்தவமாக இருந்தாலொழிய தத்ஸம்பந்திகள் அநுபவிக்க முடியாதன்றோ. அதுபோல, ஸ்ரீ ராமாநுஜர் ஸம்பாதித்து வைத்திருப்பது வாஸ்தவமாக இருந்தாலொழிய ஸ்ரீதேசிகனும் பின்புள்ளாரும் அதன் பலனை யநுபவிக்க முடியாதாதலால் ஸ்ரீராமாநுஜர் சேமித்து வைத்திருப்பது உண்மையே யென்று நிரூபிக்க வேண்டுவது அவசியமாயிற்று. அதற்காகவே* உக்த்யா தநஞ்ஜய *என்கிற அடுத்த ச்லோகமருளிச் செய்தார். இதில் "ச்ருத்வா வரம் தததநுபந்த மதாவலிப்தே" என்பது நிதியானது. ஸ்ரீராமாநுஜர்க்கு ஸ்ரீரங்கநாதன் ஒருவரம் கொடுத்திருப்பதாக இதில் ஸ்பஷ்டமாகவுள்ளது. அந்த வரம் எப்படிப்பட்டதென்று நாம் பிறரைக் கேட்டும் பிறர் எழுதியிருப்பதைப் பார்த்தும் தெரிந்து கொள்ளவேண்டாதபடி ஸ்வாமி தேசிகன் தாமே இங்கேயே வ்யக்தமாகக் குறிப்பிடுகிறார் "தததநுபந்தமதாவலிப்தே" என்று. இந்த விசேஷணம் இங்கு எதற்காகவென்று ஆராய்வாரில்லையே. ஸ்ரீரங்கநாதன் ஸ்ரீராமாநுஜரை நோக்கி 'உமக்கும் உம்முடைய ஸம்பந்தம் பெற்றவர்களுக்கும் உஜ்ஜீவனம் தந்தோம்' என்று வரமளித்திருந்தாலொழிய இந்த விசேஷணம் இங்குப் பொருந்தாதன்றோ. சரணாகதிகத்யத்தில் "அஸ்து தே; தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே" என்றவிடத்தில் "ஸம்பந்திநிஸ்தரணமபி ஸர்வசப்தாபிப்ரேதம்" என்று அருளிச் செய்துள்ளார் ச்ருதப்ரகாசிகாசார்யர், சரணாகதி செய்கிற வொருவர்க்கு மாத்திரமே பலனா? அவருடைய ஸம்பந்தம் பெற்றவர்களுக்கும் பலனுண்டா? என்பது விசாரம். கர்த்தாவான வொருவனே பலனையநுபவிக்க முடியுமாதலால் ஒருவர்க்கேதான் பலன்; ஸம்

பந்திகளுக்கும் பலனுண்டு என்றாலும் ஸாக்ஷாத் ஸம்பந்த முடையவர்களுக்குச் சொன்னால் சொல்லலாமே தவிர பரம்பரா ஸம்பந்த முடையவர்களுக்குச் சொல்லவே முடியாது என்பது இவர்களுடைய வாதம். இது தேசிக திவ்யஸூக்திகளோடும் ச்ருத ப்ரகாசிகாசார்யருடைய ஸ்ரீஸூக்திகளோடும் பொருந்தாது. ச்ருத ப்ரகாசிகாசார்யர் சரணாகதிகத்ய வியாக்கியானத்தில் அருளிச் செய்தது மாத்திரமேயன்றி ஸ்ரீபாஷ்யத்தில் மங்களச்லோகத்தில் "விநத விவித பூத வ்ராத ரக்ஷைகதீக்ஷே" என்றவிடத்து விவரணத்திலும் விபுல விசதமாக அருளிச் செய்துள்ளார். அங்கு வ்ராத சப்தம் நிரர்த்தகமாகாமல் ஸார்த்தகமாக வேண்டுதலால் விநதர்களுடைய ஸம்பந்தம் பெற்றவர்களும் அந்த விநதியினாலேயே ரக்ஷணம்பெறுவதாக உபபாதநம் செய்துள்ளார்; அதை ஸ்வாமி தேசிகனும் தத்வடீகையில் மிகவுகந்து எடுத்தாளுகிறார். நன்கு ஸ்தாபிக்கிறார்.

ந்யாஸதிலக ஸ்ரீஸூக்தியில் ச்ருத்வா வரம் என்றவுடனே ததநுபந்த மதா வலிப்தே என்கையாலே அரங்கன் தந்த வரத்தில் பகவத் ராமாநுஜ அநுபந்தத்தைப் பற்றின விசேஷம் இருந்து தீரவேண்டு மென்பது அவிசால்யம். அப்படிப் பட்டதொரு வரத்தை ப்ராமாணிகமாக நிரூபிக்கவேண்டும். "புங்க்தே போகாந் அவிதிதந்ருப: ஸேவகஸ்ய அர்ப்பகாதி:" என்கிற த்ருஷ்டாந்தம் எதற்காக இடப் பட்டது? அதன் ஸ்வாரஸ்யம் யாது? என்பதை உபபாதித்து உலகத்தை உகப் பிக்கவேணும். ப்ரபத்தியின் ஸ்வரூபத்தை முன்னம் நன்கு அறியவேணும். கஜேந்த்ராழ்வான் ப்ரபத்தி செய்தான், த்ரௌபதி ப்ரபத்தி செய்தாளென்றால் என்ன அர்த்தமென்று தெரியுமோ? பகவத் ப்ரவ்ருத்திக்கு விரோதியான ஸ்வப்ர வ்ருத்தியில் நின்றும் ஓய்ந்தமை தானே ப்ரபத்தி. *கஜ ஆகர்ஷதே தீரே க்ராஹ ஆகர்ஷதே ஜலே* என்னும்படி ஸ்வரக்ஷணே ஸ்வப்ரவ்ருத்தியைச் செய்து கொண்டிருந்த கஜேந்திராழ்வான் அந்த ப்ரவ்ருத்தியில் நின்றும் மீண்டதற்கு மேற்பட யாதொன்றும் செய்திலன். த்ரௌபதியும் தன் மானத்தைத் தான் காத்துக் கொள்ள வேண்டி வஸ்த்ரத்தையிறுக்கிக் கொண்டிருந்தவள் இதனால் கார்ய மாகாதென்றும் இந்த ஸ்வப்ரவ்ருத்தியானது பகவத்ப்ரவ்ருத்திக்கு விரோதி யென்றும் துணிந்து இருகையும் விட்டு ஹாக்ருஷ்ணா! என்றிருந்தது தவிர வேறொன்றும் செய்திலள். ஆழ்வாரோ நாதமுனிகளோ ஆளவந்தாரோ எம் பெருமானாரோ மற்றும் எவரேனும் ப்ரபத்தி செய்வதென்றால் இதற்கு மேற் பட ஏதுமில்லை. ஏதுமிருக்க ப்ரஸக்தியேயில்லை. ஏன்? *த்வமேவோபாய பூதோ மே பவேதி ப்ரார்த்தநாமதி:, சரணாகதி ரித்யுக்தா*என்றும், *அநந்யஸாத்யே ஸ்வாபீஷ்டே மஹாவிச்வாஸ பூர்வகம், ததேகோபாயதாயாச்ஞா ப்ரபத்திரிதி கத்த்யதே* என்றுமுள்ள ப்ரமாணங்கள் யாவும் அத்யவஸாய விசேஷமே ப்ரபத்தி யென்கிறதே யொழிய வேறொன்றையும் ப்ரபத்தியாகப் பகரவில்லை. இதை ஸ்வாமி தேசிகன் *ஆர்த்தேஷ்வாசுபலா......த்வய்யேவ த்வதுபாயதீ:*இத்யாதி பரச்சத ஸ்ரீஸூக்திகளினால் பன்னிப்பன்னியருளிச் செய்துளர். யதிராஜவிம்சதியில் *காலத்ரயேபி* என்கிற (18-ஆம்) ச்லோகத்தில் தெளிவு உள்ளது காண்க. ரஹஸ்யத்ரயஸாரப்படி த்வயத்தின் உச்சாரண அநூச்சாரணரூபமான ப்ரபத்தியை யாரும் விட்டிலர். இவ்விஷயங்களெல்லாம் அத்ருஷ்டார்த்த ஸர்வஸ்வத்திலே மிகவிரிவாக வுரைத்தோம். எம்பெருமானார்க்குப் பின்புள்ளவர்கள் நிதியாகக் கொள்ளும் விஷயம் எதுவென்றால் அவர்பெற்ற வரமேயாகும். நம்போல்வார்க்கு மஹாவிச்வாஸம் பிறப்பது அரிதாதலால் அதற்காகத் தளும்பி நிற்க வேண்டா; எம்பெருமானார் பெற்றவரம் வலிதாக இருப்பதனால் அவருடைய ஸம்பந்த வுணர்ச்சியே நமக்குத் தஞ்சம். இதுவேதான் தேசிகஸித்தாந்தமும் தென்னாசார்ய ஸித்தாந்தமும். ... ... ... ... ... *

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

தூப்புல் வள்ளல் திருவடிகள் வாழி.

கவிதார்க்கிக ஸிம்ஹ ஸர்வதந்த்ரஸ்வதந்த்ர

ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் பணித்த

# தேசிகப்பிரபந்தம்.

## ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்

### எளிய நடையில் தெளிய எழுதிய பொழிப்புரையுடன் கூடியது.

உரையவதாரிகை:— ஸ்வாமி தேசிகன் திருவாய் மலர்ந்தருளிய திவ்ய நூல்கள் வட மொழியிலும் தென் மொழியிலும் ப்ராக்ருதத்திலுமாகும். ஹயக்ரீவ ஸ்தோத்ரம் முதலாகப் பாதுகாஸஹஸ்ரமீறுகவுள்ள ஸ்துதி நூல்களும், யாதவாப்யுதய ஹம்ஸஸந்தேசாதி காவ்ய நூல்களும், அதிகரணஸாராவளீ தத்வமுக்தாகலாப சததூஷணீ ந்யாயஸித்தாஞ்ஜநாதி வேதாந்த நூல்களும், தாத்பர்யசந்திரிகா தத்வடீகா ஸ்தோத்ரபாஷ்ய கத்யபாஷ்யாதி வியாக்யான நூல்களும், ஸச்சரித்ரரக்ஷா ஸ்ரீபாஞ்சராத்ரரக்ஷா நிக்ஷேபரக்ஷாதி ஸதநுஷ்டாந நிர்ணய நூல்களும் வட மொழியிலவதரித்தவை. அச்யுத சதகமென்னும் ஒரு ஸ்தோத்ர நூல்மட்டும் ப்ராக்ருத பாஷையிலவதரித்தது. ஸம்ப்ரதாய பரிசுத்தி முதலான ரஹஸ்யங்கள் மணிப்ரவாள நூல்களாகும். தமிழ்ச் செய்யுட்களாகத் தோன்றியுள்ள பிரபந்தங்கள் தேசிகப் பிரபந்தங்களென்று வழங்கப்பெறும்.

இவற்றுள், அடைக்கலப்பத்து, திருச்சின்னமாலை, மும்மணிக்கோவை, பிரபந்தசாரம், ஆஹார நியமம் முதலான சில நூல்கள் ஸ்வதந்த்ரப்பிரபந்தங்களாகும். அம்ருதாஞ்ஜனி, அதிகாரஸங்க்ரஹம், அம்ருதாஸ்வாதினி, பரமபத் ஸோபாநம், பரமதபங்கம், அத்திகிரி மாகாத்மியம் என்னும் பிரபந்தங்கள் தாமியற்றிய ரஹஸ்யக்ரந்தங்களுக்கு உள்ளீடானவை. ஆக இப்பிரபந்தங்கட்கெல்லாம் பண்டித பாமர விபாகமற யாவர்க்கும் ஒருங்கே உதவுமாறு எளிய தெளியவுரையெழுதப்படுகின்றது. ஹேவிளம்பியாண்டில் புரட்டாசித்திங்களில் தூப்புல் தேசிகன் திருநாள் தொடக்கத்தன்று கிடைத்த மஹதநுக்ரஹமடியாக இவ்வுரை எழுதப்படுகின்றது. ஸம்ப்ரதாய பரிசுத்தி முதல் ரஹஸ்யத்ரய சுளகாந்தமான பதினாறு ரஹஸ்யங்களைச் சார்ந்த முப்பத்தொன்பது பாசுரங்கள் கொண்ட பிரபந்தத்திற்கு அம்ருதரஞ்ஜனி யென்று திருநாமம். ஸஹ்ருதய ஹ்ருதயங்களை அம்ருதம் போல் ரஞ்ஜிக்கச்செய்யும் பிரபந்தமென்றபடி. அமுதமயமான பாசுரங்களினால் ரஞ்ஜிப்பிக்குமது என்னவுமாம்.

ஸ்ரீ:

# வேதாந்த தேசிகன் வைபவம்.

## திருவவதாரம்.

இவ்வாசிரியர் திருவவதரித்தவிடம் "காசிமுதலாகிய நன்னகரி யெல்லாம் கார்மேனி யருளாளர் கச்சிக்கு ஒவ்வா" என்றும் "முத்திதரும் நகரேழில் முக்கியமாங் கச்சி" என்றும் இவர் தம்மாலே புகழப்பட்ட காஞ்சீக்ஷேத்ரத்தில் திருத்தண்கா என வழங்கப்பெறும் விளக்கொளி யெம்பெருமான் ஸந்நிதியின் பரிஸரமாகிய 'தூப்புல்' என்னும் திவ்யஸ்தலம். இவர்க்குத் திருத்தகப்பனர் அநந்த ஸோமயாஜிகள். திருத்தாயார் தோதாத்ரியம்மை. ஆசிரியர் (மாதுலரான) கிடாம்பி அப்புள்ளார். இராமானுசப் பிள்ளான் என்பவரும் அவரே. திருவேங்கடமுடையானுடைய திருமணியே இவ்வாசிரியராய்த்தோன்றினதாகப் பல ப்ரமாணங்களினால் விளங்குகின்றது. இவ்வாசிரியர் திருவேங்கட முடையானுடைய மஹோத்ஸவத்தின் அவப்ருத தினமாகிய புரட்டாசித்திருவோணத்தன்று திருவவதரித்தமைபற்றி ஸ்ரீவேங்கடநாத சர்மா என்று திருநாமம் சாத்தப்பெற்றார். வேதாந்தாசார்யர் என்கிற திருநாமம் பிறகு பட்டப்பெயராகக் கிடைத்ததிவர்க்கு. [கலி ௵ 4370, சாலிவாஹநசக௵ 1191. கி. பி. 1268—விபவஸம்வத்ஸரத்தில் இவரது திருவவதாரமென்று பெரியார் நிரூபிக்கின்றனர்.] நூறு ஸம்வத்ஸரம் இவ்விபூதியில் எழுந்தருளியிருந்து திருநாட்டுக் கெழுந்தருளினாராதலால் இற்றைக்கு ஏறக்குறைய 590 ஆண்டுகட்குமுன் இவ்வாசிரியரது ஜீவித காலம் என விளங்காநின்றது.

## இளமையில் பெற்ற அநுக்ரஹமும் வித்யாப்யாஸமும்.

இவ்வாசிரியர் தமது மாதுலராகிய அப்புள்ளாருடைய அதிமாத்ர ப்ரீதிக்குப் பாத்ரபூதரா யிருந்துவந்தார். நடாதூரம்மாளுடைய ஸந்நிதியில் ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் செய்து கொண்டிருந்த அவ்வாசிரியர், நாலைந்து பிராயமுள்ள இவ்வாசிரியக் குழந்தையையும் உடன் அழைத்துக்கொண்டு காலக்ஷேப கோஷ்டிக்குச்செல்ல அம்மாள் இக்குழந்தையின் தேஜோவிசேஷத்தையும் ப்ரதிபாப்ரபாவத்தையும் நோக்கிவியந்து "ஆம் முதல்வனிவன்" என்று விசேஷகடாக்ஷம் செய்தருளினர். இவ்விஷயம் இவ்வாசிரியர் தம்மாலேயே அதிகரணஸாராவளியின் தொடக்கத்தில் *श्रीमद्भ्यां स्यादसावित्यनुपधि वरदाचार्य रामानुजाभ्यां सम्यग्दृष्टेन सर्वंसहनिशितधिया वेङ्कटेशेन—*ஸ்ரீமத்ப்யாம் ஸ்யாதஸாவித்யநுபதி வரதாசார்ய ராமாநுஜாப்யாம் ஸம்யக்த்ருஷ்டேந ஸர்வம்ஸஹநிசிததியா வேங்கடேசேந* என்று பணிக்கப்பட்டது. உரிய காலங்களில் சௌலோபநயநாதி ஸகலஸம்ஸ்காரங்களும் அடைவே செய்யப் பெற்ற இவர் வேதங்களை ஓதத் தொடங்கினர். வேதமோதின திறமையைப்பற்றிப் பூருவர்கள் கூறியுள்ள ஒரு ச்லோகம் மிக அற்புதமானது. ஆசார்ய சம்புவில் *अह्नाय वेदानखिलान् आचार्यादग्रहीदसौ। पुनरुच्चारणाकांक्षी पदानां वेष्टने परम्॥ *அஹ்நாய வேதாநகிலாந் ஆசார்யாதக்ரஹீதஸௌ, புநருச்சாரணாகாங்க்ஷீ பதாநாம் வேஷ்டநே பரம்* என்பதாம். வேதத்தில் வேஷ்டந பதங்கள் என்று சிலவுண்டு प्रजापतिरिति प्रजा - पतिः, भागधेयेनेति भाग - धेयेन, अग्निष्टोम साममित्यग्निष्टोम - सामम् [ப்ரஜாபதிரிதிப்ரஜா—பதி:, பாகதேயேநேதிபாக— தேயேந; அக்நிஷ்டோமஸாம மித்யக்நிஷ்டோம—ஸாமம்] என்பவை போன்ற பதங்கள் வேஷ்டநபதங்களாகும். அவை இரட்டித் திரட்டித்தே ஓதவேண்டியவையாதலால், அத்தகைய வேஷ்டநபதங்களில் மாத்திரம் ஸ்வாமிக்குப் புநருச்சாரணம் ப்ராப்தமாயிற்றே யல்லது

மற்றைப்படியுள்ள பதங்களை யெல்லாம் ஸக்ருதுச்சாரண மாத்ரத்திலேயே க்ரஹித்தருளி னாரென்று இவருடைய அஸாதாரணமான க்ரஹணதாரண படுத்வம் கூறியவாறு. இவ் வண்ணமாகவே வேதாங்கமாகவுள்ள ஸகலசாஸ்திரங்களையும் மாதுல ஸகாசத்திலேயே இருபது திருநக்ஷத்ரத்திற்குள் அதிகரித்து வைநதேயமந்த்ரோபதேசமும் பெற்று நிகரற்ற நிபுணராக விளங்கிவருகையில், ப்ராப்தகாலத்திலே க்ருஹஸ்தாச்ரமத்தையும் ஸ்வீகரித்து ஆஹிதாக்னியாய் ஸ்ரீ காஞ்சியிலேயே ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ரப்ரவசனங்கள் செய்தருளா நின்றார்.

## திருவயிந்திரபுரம் சென்று சேர்தல்.

இங்ஙனே நிகழ்ந்துவருகையில் ஒருநாள் தென்திசைத் திருப்பதிகளை மங்களாசாஸனஞ்செய்யத் திருவுள்ளங்கொண்டு பேரருளாளனது நியமனம் பெற்றுப் புறப்பட்டெழுந்தருளுகையில், பரமபாவநமான கருடநதியின் கரையில் தெய்வநாயகனுடைய ஸந்நிதாந ஸாரஸ்யத்தையும் ஒஷதாத்ரியின் வாய்ப்பையும் நோக்கி அவ்விடத்திலே சிலகாலம் வஸிக்கத் திருவுள்ளமாய், அத்திருமலையின்கண் வீற்றிருந்து முன்பு ஸ்வாசார்யர் ஸந்நிதியிலே பெற்றிருந்த வைநதேய மந்திரத்தை நியதராய் ஆவ்ருத்திபண்ணிக்கொண்டிருக்க, ஒருநாள் ஸுப்ரஸந்நராய் ஸாக்ஷாத்காரம் தந்தருளின பெரிய திருவடி ஸ்ரீ ஹயக்ரீவ மந்த்ரத்தை யுபதேசித்துச் செல்ல, பிறகு ஆங்கு அழகிய சிங்கர் திருமுன்பே ஹயக்ரீவ மஹாமந்திரத்தை நெடுநாள் ஜபித்துக்கொண் டெழுந்தருளியிருக்க, வெள்ளைப் பரிமுகரும் ஸுப்ரஸந்நராய்க் காட்சி தந்து தம்முடைய வாக்கின் அம்ருதத்தை யூட்டி அநுக்ரஹித்து மறைந்தருள, ஆசிரியர் பரமாநந்த பாராவார நிமக்நராய் க்ருதார்த்தராய் எழுந்து ஹயக்ரீவ ஸ்தோத்ரம், கருட பஞ்சாசத், தேவ நாயக பஞ்சாசத், அச்யுதசதகம் முதலிய ஸ்தோத்ரங்களையும், மும்மணிக் கோவை, நவரத்தின மாலை முதலான தமிழ்ப் பிரபந்தங்களையும் பணித்தருளினார்.

## திருக்கோவலூர் மங்களாசாஸனமும் கச்சிப்பதி சேர்தலும்.

பிறகு தெய்வநாயகப் பெருமானிடம் நியமநம் பெற்றுக்கொண்டு, "பாவருதமிழால் பேர்பெறு பனுவற்பாவலர் பாதிநாளிரவில், மூவரு நெருக்கி மொழிவிளக்கேற்றி முகுந்தனைத் தொழுத நன்னாடு" என்கிறபடியே பொய்கை பூதம் பேயாழ்வார்கள் கூடிக்குலாவி அநுபவித்து மகிழ்ந்த திருப்பதியாகிய திருக்கோவலூரில் ஆயனாரைத் திருவடி தொழ விரும்பி அங்கெழுந்தருளிச் சிலகாலம் வாழ்ந்து அப்பெருமான் விஷயமாக "தேஹளீசஸ்துதி" என்கிற ஸ்தோத்ரமுமருளிச் செய்தார். அதில் 6, 7, ச்லோகங்களில் முதலாழ்வார்கட்கும் எம்பெருமானுக்கும் நேர்ந்த பரிமாற்றம் வெகு அழகாகப் பேசப்பட்டுள்ளது. இங்ஙனம் திருக்கோவலூரில் சிலகாலம் எழுந்தருளியிருந்து அங்குள்ளாருக்கு வேதாந்தக்ரந்த ப்ரவசநமும் செய்தருளி, பிறகு யாத்திரையடைவே ஸ்வாவதாரஸ்தலமான பெருமாள் கோவிலுக்கு மீண்டெழுந்தருளி அங்கு விசேஷத: க்ரந்தப்ரவசநம் செய்தருளுங்காலத்தில், பெருந்தேவித் தாயார் விஷயமாக ஸ்ரீ ஸ்துதியையும், பேரருளாளன் விஷயமாக வரதராஜ பஞ்சாசத் என்னும் ஸ்தோத்ரத்தையும், அடைக்கலப்பத்து, அர்த்த பஞ்சகம், ஸ்ரீவைஷ்ணவதினசரி, பன்னிருநாமம், திருச்சின்னமாலை, ஹஸ்திகிரி மாஹாத்மியம் முதலான தமிழ்ப் பிரபந்தங்களையும், ஸ்ரீயதோக்தகாரி யெம்பெருமான் விஷயமான வேகாஸேது ஸ்தோத்ரத்தையும், அட்டபுயகரத்தெம்பெருமான் விஷயமான அஷ்டபுஜாஷ்டகத்தையும், விளக்கொளி யெம்பெருமான் விஷயமான சரணாகதிதீபிகை யென்கிற தீபப்ரகாசஸ்தோத்ரத்தையும், வேளுக்கை

யெம்பெருமான் விஷயமான காமாஸிகாஷ்டகத்தையும், திருப்புட்குழிப்போரேற்றுப் பெருமாள் விஷயமான பரமார்த்தஸ்துதியையும் அருளிச்செய்தார்.

## வைராக்ய பஞ்சக மவதரித்த விசேஷம்.

* திருமலைமால் திருமணியாய்ச் சிறக்க வந்தருளின நம்வேதாந்த தேசிகன் ஸர்வதோமுகமான ஞானம் படைத்தது போலவே விரக்தியையும் லோகவிலக்ஷணமாகப் பெற்றவராதலால் கூரத்தாழ்வானைப் போலவே தாமும் உஞ்சவ்ருத்தியையே கொண்டு பெருமாள் திருவாராதநத்தைக் குறையறநடத்திக்கொண்டு செந்தமிழும் வடமொழியும் திகழ்ந்த நாவர்க்கு உபயவேதாந்த க்ரந்தப்ரவசநம் செய்தருளா நின்றுகொண்டு *கார்மேனி யருளாளர் கச்சிப்பதியிலே பேரருளாளனை மங்களாசாஸனஞ்செய்து கொண்டெழுந்தருளியிருந்தார். இவருக்குப் பரமமித்திரரான ஸ்ரீவித்யாரண்ய ஸ்வாமிகள் விஜயநகர மஹாராஜனிடத்தில் மிகுந்த வால்லப்யம் பெற்றுப் பலபல வித்வான்களை ஆதரிப்பதற்குரிய ஸௌகர்யங்களையுடையரா யிருந்தபோது இந்த ஸ்ரீதேசிக சிகாமணியை ஸ்மரித்து இவருடைய ஏழைமையைப் போக்கிச் செல்வச் சிறப்பையுண்டாக்கக் கருதி அந்த விஜய நகராதீசனிடத்திற்கு எழுந்தருளுமாறு ப்ரார்த்தநா பத்திரிகையை அனுப்ப, அதனைக் கடாக்ஷித்தருளின ஸ்வாமி தேசிகன் தம்முடைய நிஷ்டா விசேஷங்களை அந்த வித்யாரண்ய ஸ்வாமி அறிந்துவைத்தும் வீணாக இப்படி ஆஹ்வாநம் பண்ணுகிறாரே! எனத் திருவுள்ளம் நொந்து, அவருடைய பத்திரிகைக்கு உத்தரமாக

न मे पित्रार्जितं किंचित् न मया किंचिदार्जितम् ।
अस्ति मे हस्तिशैलाग्रे वस्तु पैतामहं धनम् ॥

ந மே பித்ரார்ஜிதம் கிஞ்சித் ந மயா கிஞ்சிதார்ஜிதம்,
அஸ்தி மே ஹஸ்திசைலாக்ரே வஸ்து பைதாமஹம் தநம்.

என்கிற ச்லோகத்தை யெழுதியனுப்ப, அவரும் அதைக் கண்டு, ஸ்வாமி தேசிகனிடத்தில் அவர்தாம்வைத்திருந்த ப்ரீத்யதிசயத்தினால் எப்படியாவது இவர்க்கு அபரிமித த்ரவ்யலாபம் பண்ணிவைக்க வேணுமென்கிற ஆசையினால் மீண்டும் மிக நிர்ப்பந்தித்துப் பத்ரிகை விடுக்க, அப்போது ஸ்வாமி அநுக்ரஹித்தருளியனுப்பிய ச்லோக ரத்னங்கள் வைராக்ய பஞ்சகமென்று ப்ரஸித்தி பெற்றிருக்கும்.

## திருக்குமாரர் திருவவதரித்தல்.

ஸகல வகைகளாலும் ஸ்வாமியை நிகர்த்தவரான ஒரு திருக்குமாரர் நளஸம்வத்ஸரம் ஆவணிமாதத்து ரோஹிணீ நக்ஷத்ரத்தில் திருவவதரிக்க, அவர்க்கு வரதாசார்யர் என்று திருநாமமிடப்பட்டது. இவரும் ப்ராப்த காலங்களில் உபநயநாதி ஸம்ஸ்காரங்களைப் பெற்று *யஸ்மாதேவ மயா ஸர்வம் சாஸ்த்ரமக்ராஹி நாந்யத:* என்று இவர் தாமே பேசியுள்ளபடி ஸ்வாமி ஸந்நிதியிலேயே ஸகல சாஸ்த்ரார்த்தங்களையும் அதிகரித்து, விளக்கில்கொளுத்தின தீவட்டி போலே விளங்கி வந்தார்.

## திருக்கிணறு கட்டினது.

ஸ்வாமி ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரரென்று பிருது வஹித்து விளங்கிவந்ததில் பொறுமை கொண்ட ஒரு கொத்தன் ஸ்வாமி திருவயிந்திரபுரத்தில் எழுந்தருளியிருக்கும்போது ஒரு

காள் அருகே வந்து, தேவரீர் எல்லாக் காரியங்களும் செய்ய வல்லமை பெற்றிருந்தாலன்றோ ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரரென்று விருதூதிப் புறப்படலாம்; நான் கிணறு கட்டுவேன்; அது கட்ட உமக்குத் தெரியாதல்லவோ? அப்படியிருக்க இந்த விருதை நீர் எங்ஙனே வஹிக்கலாம்? என்று ஆக்ஷேபிக்க, ஸ்வாமியும் புன் முறுவல் செய்துகொண்டே அவன் முன்னிலையிலேயே ஒரு கிணறு நிர்மாணஞ் செய்து அவனது செருக்கை யடக்கினர். இந்தக் கிணறு நாளைக்கும் பக்தர்கள் ஸேவிக்கத்தக்க நிலைமையிலுள்ளது.

## பாம்பாட்டியை வென்றது.

மற்றொருகால் ஒரு பாம்பாட்டி, ஸ்வாமிஸந்நிதானத்தில் விடைகொண்டு 'நீர் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரராகில் கொடிய பாம்புகளை ஆணையிட்டுக் கட்டுந்திறனும் உமக்குத் தெரிந்திருக்கவேண்டுமே; அந்த வல்லமையைக் காட்டுவீராகில் நீர் மெய்யே ஸர்வதந்த்ர ஸ்வதந்திரரே' என்று சொல்லிக்கொண்டே தான் ஜீவனார்த்தமாக வைத்திருந்த சில பாம்புகளைப் பெட்டியில் நின்றும் திறந்து விட, அவையும் சீறிக்கிளம்ப, அப்போது ஸ்வாமி இனி நாம் வெறுமனிருக்கலாகாதென்று கருதி வைநதேய மந்த்ர ஜபத்துடனே தம்மைச் சுற்றிச் சில கோடுகள் போட, மிகக்கொடிய ஒரு ஸர்ப்பம்மாத்திரம் கோடுகளைக்கடந்து ஸ்வாமியை நெருக்கினவளவிலே; ஸ்வாமி உடனே ஹ்ருதயத்தினுல் பக்ஷிராஜனை ஆஹ்வானம் செய்தருள, அவனும் சடக்கென வந்து தோன்றி அந்த அரவங்களைக் கவ்விக்கொண்டு அகலவே பாம்பாட்டி தான் பங்கப்பட்டது மல்லாமல் தனது ஜீவனார்த்தமாக வைத்திருந்த பாம்புகளும் தொலைந்ததனுல் பரிதாபம் மிக்கு ஸ்வாமி திருவடிகளிலே விழுந்துவேண்டிக்கொள்ள, ஸ்வாமியும் திருவுள்ளமிரங்கி மீண்டும் அந்தப் பாம்புகள் அவனுக்குக் கிடைக்குமாறு அநுக்கிரஹஞ் செய்தருளினர்.

## ஸ்வாமியின் கவிதா சாதுர்யம்.

உலகில் கவனம் செய்வதில் மிகவும் குசலர்களான மஹாகவிகள் பலரிருந்தாலும் ஸ்வாமியினுடைய கவித்வஸாமர்த்தியம் பரமவிலக்ஷணமாயிருக்கும். 1. ஆசுகவி, 2. மதுரகவி, 3. சித்ரகவி, 4. விஸ்தாரகவி—என நான்கு வகையாக வகுக்கப்பட்டுள்ள கவிதையிலும் ஸ்வாமி நிகரற்றவர். हठादाकृष्टानां कतिपयपदानां रचयिता "ஹடாதாக்ருஷ்டாநாம் கதிபயபதாநாம் ரசயிதா" என்கிற கணக்கிலே மிகவும் சிரமப்பட்டுப் பதங்களைக் கூட்டிக் கவிபண்ணுகையன்றிக்கே சொற்களானவை "என்னைக்கொள் என்னைக்கொள்" என்று அஹமஹமிகயா வந்து நெருக்குண்டு கங்காப்ரவாஹம் போலே பெருக்கெடுத்து ப்ரவஹிக்கும்படியான ஆற்றல் அநிதரஸாதாரணமாக இங்குக்காணத்தக்கது. ஒரு க்ஷணமாத்திரத்திலே அனேக ச்லோக ராசிகளை அவதரிப்பிக்கும் சக்தியும் அந்த ச்லோகங்களெல்லாம் அர்த்த புஷ்டியோடும் ரஸபுஷ்டியோடும் கூடியிருக்கப்பெறுகையும், பத்மபந்தம், சக்ரபந்தம், முரஜபந்தம் என்றாற்போலே பலவகைப்பட்ட பந்தங்களிலேயமைத்து ச்லோகங்களை அவதரிப்பிக்க ஸங்கல்பித்த மாத்திரத்திலே அவை அழகாக அமையும் அதிசயமும், அவைதாமும் எண்ணிலாதிருக்கப் பெற்ற ஆச்சரியமும் நோக்குமிடத்து, கவிதாவதார பூமியாக ஸ்வாமியை அறுதியிடலாம். ஸ்வாமி யருளிச்செய்த நூற்றுக்கணக்கான திவ்யக்ரந்தங்களில் இந்த சாதுர்ய விசேஷம் விசதம். பாதுகாஸஹஸ்ரமும் யாதவாப்யுதயமும் ஸ்வாமியின் கவிதையைக் குன்றிலிட்ட விளக்காக்கும்.

2

## விரக்தியின் வீறு.

ஸ்வாமி உஞ்சவ்ருத்தியினாலேயே (கூரத்தாழ்வான் போல்) தேஹயாத்திரையை நடத்திக்கொண்டு வந்தாராதலால் அதை இழிவாக நினைத்த சிஷ்யர்கள் அந்த உஞ்சவ்ருத்தியை நிவர்த்திப்பிக்க வேணுமென்றெண்ணி ஒரு நாள் தண்டுலத்துடன் ஸுவர்ண த்ரவ்யங்களையும் சேர்த்து ஸமர்ப்பித்தார்கள். திருமாளிகைக்கு எழுந்தருளின பின் தேவிகள் அவற்றைக் காண்பிக்க ஸ்வாமி கடாக்ஷித்து அதைக் காஷ்டலோஷ்ட நிர்விசேஷமாக எண்ணி வீதியிலே இறைத்துவிட்டார்.

## அபீதிஸ்தவமவதரித்ததும் அது ஸபலமானதும்.

ஸ்வாமி கோயிலில்வாழ்ந்தருளுங்காலத்தில் ஒருநாள் துலுக்கர்கள் ஸஹஸா படையெடுத்து வருகையில் அப்போது கோயிலில் இருந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் பலரும் ஸதுபாயமாகப் பெருமாளுக்குச் சேமக்காப்புச் செய்து பல திசைகளிலும் பாறியோட நேர்ந்தது. அப்போது ஸ்வாமி தேசிகனும் மேற்கே எழுந்தருளும்படியாயிற்று. அப்போது கோயிலில் ச்ருதப்ரகாசிகா பட்டர் துருஷ்கயவநர்களின் நலிவு பொறுக்கமாட்டாமல் உயிர் துறக்குமளவாக, ஏற்கெனவே தாமருளிச் செய்திருந்த ச்ருதப்ரகாசிகா ஸ்ரீகோசத்தை ஸ்வாமி திருக்கையிலே கொடுத்து "இதை ஸத்பாத்ர விநியோகம் செய்து போரீர்" என்று நியமித்து, தம்முடைய இரண்டு குமாரர்களையும் ஒப்படைத்துத் திருநாட்டுக் கெழுந்தருளினார். அப்போது ஸத்யமங்கலம் முதலான மேல் நாட்டு நகரங்களிலே வாழ்ந்து திருநாராயணபுரம் சென்று சேர்ந்த தேசிகன் திருவரங்கம் பெரியகோயில் நிஷ்கண்டகமாகவேணுமென்றும் பழையபடியே தாம் கோயிலிலே வாழப் பெற வேணுமென்றும் கொண்ட மநோரதங்களைப் பெய்து அபீதிஸ்தவ மென்னும் அரிய பெரிய ஸ்தோத்ர மொன்றை யருளிச்செய்து சிஷ்யர்களுடனே நித்யாநுஸந்தானம் செய்து வந்தார். அபீதிஸ்தவாநுஸந்தானத்தின் பயனாக அடியார்களும் அரங்கரும் அவத்யம் நீங்கி அமரிக்கை யடைந்ததாகக் கேள்வியுற்ற ஸ்வாமி தாமும் போரவு முகந்தருளி நம்பெருமாள் ஸந்நிதிக்கே மீண்டும் வந்து சேர்ந்தார். அப்போது கொப்பணார்யன் * என்னும் பரமபாகவதோத்தமனை செஞ்சி சிற்றரசனொருவன் துருஷ்கர்களை யெல்லாம் வலியொழித்து ஆபத்துக்களை அறவேயொழித்து நம்பெருமாளையும் யதாவத்தாகத் திருப்ரதிஷ்டை செய்வித்து நித்யோத்ஸவாதிகளை யெல்லாம் நிலைபெறுத்தியிருந்த சிறப்புக்களைக் கடாக்ஷித்துத் திருவுள்ளம் மகிழ்ந்திருந்தார்.

## த்வைதாத்வைத மாத்யஸ்த்யம்.

இங்ஙனம் ஸ்வாமி கோயிலில் சீரும் சிறப்பும் பொலிய வாழ்ந்தருளா நிற்குங்காலத்திலே, அத்வைத மத ப்ரவர்த்தகரா யிருந்த வித்யாரண்யருக்கும் த்வைத மத நிர்வாஹகரா யிருந்த அக்ஷோப்ய முனிவர்க்கும் வேதாந்த வாக்கியார்த்தம் நடந்து வருகையில் அதில் ஜயாபஜயம் நிஷ்கர்ஷிக்கத் தகுதியான மத்யஸ்தர் நேர்படாமல் அவர்கள் தங்களுடைய வாதவிவாதங்களை யெழுதி ஸ்வாமி தேசிகனிடம் அனுப்ப, ஸ்வாமி அவற்றைப் பராமர்சித்து அக்ஷோப்ய முநிபக்ஷத்தில் வெற்றியைத் திருவுள்ளம் பற்றி *असिना तत्त्वमसिना परजीव-प्रभेदिना । विद्यारण्यमहारण्यम् अक्षोभ्यमुनिरच्छिनत् ॥ *அஸிநா தத்த்வமஸிநா பரஜீவப்ரபேதிநா வித்யாரண்ய மஹாரண்யம் அக்ஷோப்ய முநிரச்சிநத்* என்கிற ச்லேஷஸம்வலிதமான காரிகாரத்னத்தை அநுக்ரஹித்து அனுப்பியருளினார்.

## பாதுகாஸஹஸ்ரப்ராதுர்ப்பாவம்.

ஸ்வாமி பணித்த ஸ்தோத்ரங்களுக்குள் அற்புதமானது பாதுகாஸஹஸ்ரம். இது, அழகிய மணவாளனுடைய திருவடி நிலையை ஆயிரம் ச்லோகங்களால் ஆச்சரியமாக வருணிக்கும் ஸ்தோத்ரம். இதனை ஸ்வாமி அருளிச்செய்தது ஓர் இரவின் ஏகதேசத்திலே யென்பர். இதனை யருளிச் செய்ததற்குக் காரணம் இன்னதென்பதை "ஆசாரிய சம்பூ" என்றுப்ரஸித்தமான வேதாந்தாசார்ய விஜயக்ரந்தம் ஆறுவது ஸ்தபகத்தில் கூறியுள்ளது; ஸ்வாமியின் பெருமையைப் பொறுதவனும், 'நாமே ஆசுகவி' என்று செருக்குற்றவனுமான ஒரு இதர ஸமயக்கவியோடு ஸ்பர்த்தை யுண்டாகி அதனால் ஸ்வாமி இந்த க்ரந்தம் அருளிச் செய்யலாயிற்றென்கிறார் சம்பூகாரர். வைபவப்ராகாசிகா ஸ்தோத்ரத்திலோ வென்னில் (ச்லோ. 114.) "ஸம்ப்ரார்த்திதஸ் ஸம்ஸதி ஸூரிவர்யை: பாதாவநீம் ரங்கபதேர் நிசாயாம்" என்கிற ச்லோகத்தினால், திருவோலக்கத்தில் சில மஹான்கள் ஸ்வாமியைப் பிரார்த்திக்க அதனால் இந்த ஸ்தோத்ர மருளிச் செய்ததாகச் சொல்லிற்று.

## சில்பியை வென்ற சிறப்பு.

ஒருநாள் சில பொறாமையாளர்களால் தூண்டப்பட்ட சில்பியொருவன் ஸ்வாமியின் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ர பிருதை ஆக்ஷேபித்து சில்பத்திலும் ஸ்வாமியினுடைய அப்ரதிம சாதுர்யத்தை உலகமறிய ப்ரகாசிப்பிக்கவேண்டிக் கொக்கரித்து நிற்க, அப்போது ஸ்வாமியும் தம்முடைய சில்பசாஸ்த்ர பாண்டித்யத்தை நன்கு புலப்படுத்தித் தம்மைப்போல ஒரு விக்ரஹம் எறியருளப்பண்ணிக்காட்ட, ஸுபரீக்ஷிதமான அதன் பொருத்தத்தைக் கண்டு வியந்த அந்த சில்பி தோற்றேனென்று திருவடிகளிலே விழுந்து க்ஷாமணம் வேண்டிச் சென்றான். அந்த திவ்யமங்கள விக்ரஹத்தை ஸ்வாமி தாம் ஆரத் தழுவியருளித் திருக்குமாரர்பாடே கொடுத்தருளினரென்பர்.

## நிகமனம்.

இங்ஙனேயான அதிமாநுஷ திவ்யப்ரபாவங்களைப் பன்னியுரைக்குங்கால் பாரதமாம். கடலளவாய் திசை யெட்டினுள்ளும் மிடைதந்த கலியிருளை உபதேசங்களாலும் அநுஷ்டானங்களாலும் பல்பல திவ்யக்ரந்த ரசனைகளாலும் போக்கியருளி "பொலிகபொலிகபொலிக போயிற்று வல்லுயிர்ச்சாபம் நலியும் நரகமும் நைந்த நமனுக்கிங்கியாதொன்றுமில்லை" என்ற ஆழ்வாரருளிச் செயலை அர்த்தவத்தாக்கி யருளினர். எப்படிப்பட்ட அதிசயிதப்ரபாவர்களையும் எம்பெருமான் ஒருகால் தன்னடிச்சோதிக்கு வரவழைத்துக் கொள்வதென்பது ஒரு நியமமாகக் காணுதலால் ஸ்வாமியையும் * சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியேற வரவழைத்துக் கொண்டு ஒழிவில் காலமெல்லாம் வழுவிலா வடிமைகொண்டருளத் திருவுள்ளம்பற்றின வளவிலே, ஸ்வாமியும் ஸௌம்யஸம்வத்ஸரத்துக் கார்த்திகைப் பௌர்ணமி நன்னாளில் இருள் தருமாஞாலத்தை விட்டகன்று தெளிவிசும்பு திருநாடேற வெழுந்தருளினர். ... ... ...

ஸ்ரீமத் வேதாந்த தேசிக வைபவம் முற்றிற்று.

ஸ்ரீ:

# முதற்பிரபந்தம் – அம்ருதரஞ்ஜனி.

தம்பரமென்றிரங்கித் தளராமனம் தந்தருளால்
உம்பர்தொழும் திருமாலுகந்தேற்கு முபாயமொன்ருல்
நம்பிறவித்துயர் மாற்றிய ஞானப்பெருந்தகவோர்
சம்பிரதாயமொன்றிச் சதிர்க்கும் (நிலை) நெறி சார்ந்தனமே. (1)

*இப்பாசுரமும் மேற்பாசுரமும் ஸம்ப்ரதாய பரிசுத்திரஹஸ்யாநுபந்திகள்.*

*நம்போல்வாரை ரக்ஷிப்பதைத் தம்முடைய பொறுப்பாகக் கொண்டு நம்மிடத்துக் கருணை கூர்ந்து அந்தக் கருணையினுல் நமக்கு அசஞ்சலமான மனத்தை உபகரித்து, நித்யஸூரி ஸேவ்யனை எம்பெருமான் உகந்து ஏற்றுக்கொள்ளக் கூடியதான சரணுகதியென்னும் அத்விதீயமானதோருபாயத்தினுல் நம்முடைய பிறவித் துன்பத்தைப் போக்கினவர்களாய் மஹாஜ்ஞாநாதிகர்களான பேராசிரியர்களின் ஸம்ப்ரதாயத்திற் படிந்து சதிரான நிலையைச் சார்ந்தோம்.*

*மஹாசாரியர்களின் ஸம்பிரதாயத்திலே நாம் படிந்தால் சதிரான வாழ்வைப்பெறலா மென்று எதிர்காலமாகக் கூறவேண்டியதை இறந்த காலத்தாற் கூறினது இது நிஸ்ஸந்தேஹ மென்று காட்டுதற்காம்.* ... ... ... ... (1)

கடலமுதத்தைக் கடைந்து சேர்த்த,
திருமாலடி காட்டிய நம்
தேசிகர்தம் நிலை பற்றிச் சேர்ந்தோமே. (2)

*தேவர்களுக்காகக் கடல் கடைந்து அமுதமளித்த திருமாலின் திருவடிகளை நமக்குத் தஞ்சமாகக் காட்டிக்கொடுத்த நம் பேராசிரியர்களின் ஒழுக்கத்தைப் பின்பற்றி நின்றேம். [ஸதாசார்ய ஸம்பிரதாயத்தைப் பேணிஞல் திருமாலடி காணலாகுமென்பது இதன் கருத்து.]*

முத்திக்கருள் சூட மூன்றைத் தெளிமுன்னம்,
இத்திக்கா லேற்கு மிதம். (3)

*மோக்ஷம் பெறுதற்கு மூலகாரணமான பகவத் க்ருபையை நாம் அடையவேண்டியதற்காக சித்து அசித்து ஈச்வரனென்னும் தத்வத்ரயத்தை முந்துற முன்னம் தெளிவாகத் தெரிந்து கொள்ள ப்ராப்தம்; இங்ஙனே தெரிந்துகொள்வதனுல் நமக்கு ஸகல ஹிதங்களும் நன்கு பொருந்தும். ["முமுக்ஷுவான சேதநனுக்கு மோக்ஷமுண்டாம்போது தத்வத்ரயஜ்ஞான முண்டாகவேணும்" என்று தத்வத்ரயப்ரதமசூர்ணையைத் தழுவிப் பணித்தபடி.] இப்பாசுரம் தத்வபதவீரஹஸ்யத்தைச் சேர்ந்தது.* ... ... ... ... (3)

மூன்றிலொருமூன்று மூவிரண்டு முந்நான்கும்,
தோன்றத் தொலையும் துயர். (4)

*ரஹஸ்யத்ரயமென்று ப்ரஸித்தமாகச் சொல்லப்படுகிற மூன்று ரஹஸ்யங்களுள் மூன்று பதங்களையுடைத்தான திருமந்த்ரமும், ஆறு பதங்களையுடைத்தான த்வயமும், பன்னிரண்டு–*

பதங்களையுடைத்தான சரமச்லோகமும் ஸார்த்தமாக மனதில் விளங்கப்பெறின் ஸாம்ஸாரிக துக்கங்கள் தொலையும். [முமுக்ஷுக்களுக்கு ரஹஸ்யத்ரயார்த்த ஜ்ஞானமே அநிஷ்ட நிவாரண பூர்வகமாக இஷ்ட ப்ராபணம் பண்ணிவைக்குமென்றவாறு.]

இப்பாசுரம் ரஹஸ்ய பதவீரஹஸ்யத்திற் சேர்ந்தது. ... (4)

உயிருமுடலு முடலாக வோங்கித்
தயிர் வெண்ணெய் தாரணியோடுண்டான்—பயிரில்
களைபோ லசுரரைக் காய்ந்தான்றன் கையில் (5)
வளைபோலெம் மாசிரியர் வாக்கு.

நம் ஆசாரியர்களின் திவ்ய ஸூக்திகள் எப்படிப்பட்டவை யென்றால், சேதநாசேதநங்களைத் தனக்குச் சரீரமாகக்கொண்டவனாய் அதனால் பராத்பரனாக விளங்குபவனாய் (க்ருஷ்ணாவதாரத்தில்) தயிர் வெண்ணெய் முதலியன அமுது செய்தவனாய், ஒருகாலத்திலே உலகத்தையு முண்டவனாய், பயிரினிடையே களைதோன்றுவதுபோல ஸாது ஜனங்களிடையே தோன்றிய ஆஸுரப்ரக்ருதிகளை நிரஸித் தொழித்தவனான எம்பெருமான் தனது திருக்கையில் ஏந்தியுள்ள சங்குபோல் ஸர்வஜ்ஞத்வத்தைத் தரவல்லவை. [எம் ஆசிரியர்வாக்குக்கள்].

உத்தாநபாத புத்ரனான த்ருவனென்னும் சிறுவனைப் பகவான் தனது ஸ்ரீபாஞ்சஜந்யத்தினால் ஸ்பர்சிக்க, உடனே அவன் ஸர்வஜ்ஞனாயினனென்று புராணங் கூறும். ஆகவே சங்கின் தன்மை - ஸ்வஸ்பர்சத்தினால் ஸர்வஜ்ஞத்வத்தை யூட்டுகையாயிற்று; இத்தன்மையே ஆசாரியர்களின் திவ்யஸூக்திகளுக்குமாகுமென்றதாயிற்று.

இப்பாசுரமும் மேற்பாசுரமும் தத்வநவநீத ரஹஸ்யத்திற் சேர்ந்தவை. ... (5)

அலையற்றவாரமுதக்கடல் அக்கடலுண்டமுகில்
விலையற்ற நன்மணிவெற்பு வெயில்நில வோங்குபகல்
துலையுற்றனவென்பர் தூமறைசூடும் துழாய்முடியாற்கு
இலையொத்தனவவன் பாதம் பணிந்தவர்க்கெண்ணுதற்கே. (6)

பரமபவித்திரங்களான வேதங்கள் உச்சிமேல் வைத்து மெச்சநிற்பவனும், திருத்துழாயணிந்த திருவபிஷேகத்தை யுடையனுமான எம்பெருமானுக்கு - அலையோய்ந்த அமுதக் கடலும், அந்தக் கடலைக் கழுத்தே கட்டளையாகப் பருகின காளமேகமும், விலையுயர்ந்த நீல ரத்ன பர்வதமும், வெயிலும் நிலவும் சேர்ந்து விளங்கப்பெற்ற பகலும் உவமையாகத் தகுதியுடையனவென்பர்; ஆனால் அப்பெருமானுடைய திருவடிகளைப் பற்றின பாகவதர்களுக்கோவென்னில் உவமையாகக் கூடிய பொருள்கள் நெஞ்சினாலெண்ணுதற்குங்கூடக் கிடைக்கமாட்டா. [ *निस्तरङ्गजलधीयितनित्यदर्शम्* என்று ஸுந்தரபாஹு ஸ்தவத்திலும், *स्तिमित वितरङ्गार्णवदशम्* என்று வரதராஜஸ்தவத்திலும் ஆழ்வானருளிசெய்தவற்றை யடியொற்றி 'அலையற்ற வாரமுதக் கடல்' என்றது; * सकलजलधिपानश्यामजीमूत * என்ற பட்டர் ஸ்ரீஸூக்தியை யடியொற்றி 'அக்கடலுண்ட முகில்' என்றது. ஏககாலத்தில் ஸூர்ய சந்திரர்கள் பிரகாசிப்பதுபோலத் திருவாழி திருச்சங்குகள் விளங்க நின்றமைக்கு உவமையாக * வெயில் நிலவோங்குபகலைக் கூறினர். * ஆங்குமலரும் குவியு மாலுந்திவாய், ஓங்கு கமலத்தினொண் போது - ஆங்கைத் திகிரிசுடரென்றும் வெண்சங்கம்வானிற்பகருமதியென்றும் பார்த்து*

என்ற பேயாழ்வார் பாசுரம் திருவுள்ளத்திலோடினபடி. கடல்போலவும் முகில்போலவும் பச்சைமா மலைபோலவும் பேசப்பட்ட இருளன்ன மாமேனியனை எம்பெருமானைப் பகலாகக் கூறினது "பகற் கண்டேன் நாரணனைக் கண்டேன்" "திகழுமருக்கனணி நிறமுங்கண்டேன்" என்ற அருளிச்செயல்களை யநுஸரித் தென்க. ஈற்றடியில் இலை என்றது இல்லையென்பதன் தொகுத்தல். பகவானுக்கு உவமை கூறக் கடல் முகில் மலைமுதலிய பல பொருள்கள் கிடைப்பதுபோல் பாகவதர்களுக்கும் உவமை கூறச் சில பல பொருள்கள் கிடைக்கக்கூடுமாயினும் "இல்லை யொத்தன" என்று இங்கு ஸ்வாமி பணித்ததானது - பகவானைக்காட்டிலும் பாகவதர்கள் மிகச் சிறந்தவர்களென்று கூறுவதில் நோக்குடைத்து. ஒப்பில்லாமை சொன்னது உயர்வைக்குறிக்குமதாகும். ... ... ... ... ... (6)

உத்தி திகழு முரைமூன்றின் மும்மூன்றும்
சித்த முணரத் தெளிவித்தார்—முத்திதரும்
மூல மறையின் முடிசேர் முகில்வண்ணர்
சீல மறிவார் சிலர். (7)

மோக்ஷப்ரதனும், மூலப்ரமாணமான வேதத்தின் முடியான உபநிஷத்துக்களிலே உறைபவனும், காளமேகவண்ணனுமான எம்பெருமானுடைய திருக்கல்யாணகுணங்களையறிந்த ஆசாரியர்கள் — பொருத்தமானஅர்த்தங்கள் விளங்கப்பெற்ற ரஹஸ்யத்ரயத்தில் ஒவ்வொரு ரஹஸ்யத்திலும் மும்மூன்று அர்த்தங்களாக ஒன்பது அர்த்த விசேஷங்களை எல்லாருடைய மனமும் உணரும்படி மிகத் தெளிவாக எடுத்து உபதேசித்தனர்.

ஒவ்வொரு ரஹஸ்யத்திலும் மும்மூன்று அர்த்தங்களாவன:—

திருமந்திரத்தில் - ப்ரணவத்தினால் சேஷத்வமும், நமஸ்ஸினால் தன்னிடத்தில் உபாயமொன்று மில்லாமையும், சதுர்த்தியோடே கூடின நாராயண பதத்தினால் கைங்கர்யரூப புருஷார்த்தமும் சொல்லிற்றும்.

த்வயமென்னும் மந்த்ரரத்னத்தில் — பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாகப்பற்றுகையும், அவள்முன்னாக எம்பெருமான் திருவடிகளைத் தஞ்சமாகப்பற்றுதலும், திவ்ய தம்பதிகளான சேர்த்தியிலே அடிமை செய்யப்பெறுகையும் சொல்லிற்றும்.

சரமச்லோகத்தில் - ஸர்வதர்மபரித்யாகமும், எம்பெருமானொருவனையே சரணமாகப்பற்றுதலும்; அவன் செய்யும் சேமமும் சொல்லிற்றும்.

இங்ஙனே தெளிவான பொருள்களையெடுத்துரைக்கவல்லவர்கள் ஸத்ஸம்ப்ரதாய சுத்தியுடைய சில பேராசிரியர்களே என்றாராயிற்று.

உத்திதிகழும் :— உத்தியாவது யுக்தி, பொருத்தமான அர்த்தங்களுக்கு யுக்தியென்று வ்யபதேசம். "உத்திதிகழு மொரு மூன்றில்" என்று சிலர்க்குப் பாடமாம்.
இப்பாசுரமும் மேற்பாசுரமும் ரஹஸ்யநவநீத ரஹஸ்யத்திற் சேர்ந்தவை. ... (7)

எனக்குரிய னெனதுபர மென்பேறென்னுது
இவையனைத்து மிறையில்லா விறைக்கடைத்தோம்
தனக்கிணையொன்றில்லாத திருமால்பாதம்
சாதனமும் பயனுமெனச் சலங்கள்தீர்ந்தோம்
உனக்கிதமென் றொருபாகனுரைத்ததுற்றோம்
உத்தமனுமவனுதவி யெல்லாங்கண்டோம்
இனிக்கவருமவை கவரவிகந்தோம் சோகம்
இமையவரோடொன்றினிநா மிருக்குநாளே. (8)

*எனக்கு நானே கடவேனென்றும், என்னை ரக்ஷித்துக்கொள்ளும் பொறுப்பும் என்னுடையதேயென்றும், ஸ்வரக்ஷணத்தினுலுண்டாகும் பலனும் என்னுடையதேயென்றும் ஆகவிப்படி விபரீதப்ரதிபத்தி பண்ணுமல் ஸ்வரூபத்தையும் ஸ்வாத்மரக்ஷணப் பொறுப்பையும் ஸ்வாத்மரக்ஷணத்தினுலாகும் பலனையும் ஸர்வஸ்வாமியான பெருமான் பக்கலிலே ஸமர்ப்பித்தோம்; [இவையெல்லாம் அவனுடையனவேயென்று உறுதிகொண்டோமென்கை.] தனக்கு இணையான தொன்றில்லாத பகவத் பாதாரவிந்தத்தையே உபாயமும் உபேயமுமாக வுறுதிகொண்டு ஏதத்விபரீதப்ரதிபத்திகளையொழித்தோம். * அன்று ஐவரை வெல்வித்த மாய்ப்போர்த் தேர்ப்பாகனுன கண்ணபிரான் தேர்த்தட்டிலேயிருந்து கொண்டு அர்ஜுநனை வியாஜமாகக் கொண்டு ஸகல சேதந ராசிக்குமாகும்படி 'உனக்கு ஹிதம் இதுவே' யென்று உபதேசித்த சரணுகதியைச் சார்ந்தோம். அப்புருஷோத்தமன் செய்தருளவிருக்குமுபகாரங்களையெல்லாம் சாஸ்த்ரமுகத்தாலே கண்டறிந்தோம். இனிமேல், [கவருமவை கவர] நம்மை அவசியம் கவர்ந்தேதீருமவையான அர்ச்சிராதிமார்க்கப்ராப்தியும் அடியார்கள் குழாங்களையுடன் கூடுதலுமாகிற பரமபுருஷார்த்தங்கள் நம்மனத்தை அநுக்ஷணமும் ரஞ்ஜிப்பிக்க, *மாசுச:*என்னும்படியாகச் சோகமொழியப்பெற்றோம். இனிநாம் இவ்விபூதியிலிருக்கும் நாள் *வைகுந்தமாகும் தம்மூரெல்லாம் *संसार एष भगवन्नपवर्ग एव * இத்யாதிப்படியே நித்யவிபூதிவாஸவாஸரங்களோடொக்குமத்தனை.*

இறையில்லாவிறை — *தனக்கொருஸ்வாமியில்லாத ஸ்வாமியென்கை.* (8)

தத்துவங்களெல்லாம் தகவாலறிவித்து
முத்திவழிதந்தார் மொய்கழலே—அத்திவத்தில்
ஆரமுதம் ஆருமிருநிலத்தி லென்றுரைத்தார்
தாரமுத லோதுவித்தார் தாம். (9)

தாரம் முதல் ஓதுவித்தார்தாம் — *ப்ரணவம் முதலாக ரஹஸ்யங்களையெல்லாம் அதிகரிக்கச்செய்த ஆசாரியர்கள் நமக்கு முக்கியமாக என்னவுபதேசித்தார்களென்றால், "தத்வார்த்தங்களையெல்லாம் பரமக்ருபையினுலுபதேசித்து முக்திக்கு வழிகாட்டிகளான ஆசாரியர்களின் திண்கழல்களே அவ்விபூதியில் உபேயமாயும் இவ்விபூதியில் உபாயமாயுமிருக்கு"மென்று உபதேசித்தார்கள். [ * अत्र परत्र चापि नित्यं यदीयचरणौ शरणं मदीयम् * என்ற, ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியை ஒருபுடை நினைப்பூட்டுமிது. ]*

*இது முதல் மூன்று பாசுரங்கள் தத்வமாத்ருகையைச் சேர்ந்தவை.* ... (9)

திருநாரணனெனும் தெய்வமும் சித்துமசித்துமென்று
பெருநான்மறைமுடிபேசிய தத்துவ மூன்றிவைகேட்டு
ஒருநாளுணர்ந் தவருய்யும்வகையன்றி யொன்றுகவார்
இருநாலெழுத்தி னித்யங்களோதிய வெண்குணரே. (10)

பெருமைதங்கிய நான்கு வேதங்களினுச்சியிலே திருமாலும் சித்தும் அசித்தும்—என்று பேசப்பட்ட தத்வத்ரயத்தையும் ஸ்வாசார்யன் பக்கலிலே ஒரு நாளில் [ அதாவது தம்முடைய பாக்யம் பரிபக்குவமாகப் பெற்றதொரு ஸமயவிசேஷத்தில் ] கேட்டறியப் பெற்றவர்களும், திருவஷ்டாக்ஷரமஹாமந்த்ரத்தின் உட்கருத்தை லபிக்கப்பெற்றவர்களும், அநவரதம் சிந்திக்கப்பட வேண்டிய திருக்குணங்களையுடையவர்களுமான பேராசிரியர்கள் உஜ்ஜீவநோபாயமொன்று தவிர வேறொன்றையும் நெஞ்சிலெண்ணுர்கள்.

எண்குணர் — எண்ணத்தகுந்த திருக்குணங்களையுடையவர்கள். இனி, கருணை க்ஷமை அநஸூயை முதலான எட்டுத்திருக்குணங்களையுடையாரென்றுரைப்பாருமுளர். (10)

காரணமா யுயிராகியனைத்துங் காக்கும் கருணைமுகில் கமலையுடனிலங்குமாறும்
நாரணனுர் வடிவான வுயிர்களெல்லாம் நாமென்று நல்லடிமைக்கேற்குமாறும்
தாரணிநீர் முதலான மாயைகாலம் தனிவானென்றிவையுருவாம் தன்மை தானும்
கூரணிசீர் மதியுடைய குருக்கள் காட்டக் குறிப்புடன் நாம் கண்டவகை கூறினேமே.

(இப்பாட்டு தத்வமாத்ருகையென்னும் ரஹஸ்யத்தின் முடிவிலிட்ட பாட்டாதலால் இந்த ரஹஸ்யத்தில் இன்னின்னபொருள்களையுணர்த்தினேமென்றுரைத்து நிகமிக்கிறுரிதில்.) ஸகல ஜகத்காரணபூதனும் ஸர்வாந்தர்யாமி யாயிருந்து ஸகல ஜகத்தையும் காத்தருள்பவனுய்க் கருணை காளமேகமான பகவான் பெரிய பிராட்டியாரோடு கூடி விளங்குமாற்றையும் எம்பெருமானுக்கு ஶரீரபூதர்களான ஜீவாத்மாக்களெல்லாரும் அஹமஹமிகயா அடிமைத்தொழில் செய்யத்தகுந்தவர்களாயிருக்கும்படியையும், ப்ருதிவி அப்புமுதலான பூதங்களாகப் பரிணமிக்கிறமூலப்ரக்ருதியென்ன காலமும் சுத்தஸத்வமுமென்ன இவையாகிய அசேதந தத்துவங்கள் ஸ்வரூபிகளாயிருக்கும்படியையும் நுண்மதியினரான ஆசாரியர்கள் உபதேசிக்க, நாம் குறிக்கொண்டபடியே இந்த ரஹஸ்யநூலிற் கூறினேம். ... (11)

அப்படி நின்ற வமலன் படியெல்லாம்
இப்படி யெம்முள்ளத்தெழுதினர்—எப்படியு
மோரார் சுருதி யொளியா லிருள்நீக்குந்
தாரா பதியனையார் தாம். (12)

வேதாந்தங்களாகிற சந்திரிகையினுல் ஸர்வப்ரகாரத்தாலும் அஜ்ஞாநாந்தகாரத்தையொழிப்பவர்களும் சந்திரனைப்போன்று ஆஹ்லாதகரர்களுமான ஆசாரியர்கள் - நம்மாலறிய முடியாதபடி நின்ற அகிலஹேயப்ரத்யநீகனை எம்பெருமானுடைய படிகளையெல்லாம் ரஹஸ்யமாத்ருகையென்னுமிந்த ரஹஸ்யத்திற்கூறியபடி நம்முள்ளத்துள்ளே பதியவைத்தருளினர்கள். இப்பாசுரமும் மேற்பாசுரமும் ரஹஸ்யமாத்ருகையைச் சேர்ந்தவை. (12)

செம்பொற் கழலிணைச் செய்யா ளமருந் திருவரங்கர்
அன்பர்க் கடியவர்ராயடி சூடிய நாமுரைத்தோம்
இன்பத்தொகையென வெண்ணிய மூன்றினெழுத்தடைவே
ஐம்பத் தொருபொரு ளாருயிர் காக்கு மமுதெனவே. (13)

ரஹஸ்யமாத்ருகையென்னுமிந்த ரஹஸ்யத்தில் ஐம்பத்தொரு பொருள்களையுரைத்தோம். அவை எப்படிப்பட்டவையென்னில்; அருமையானவுயிரை உஜ்ஜீவிக்கச் செய்யும் அம்ருதம் போன்றவை; பின்னையும் எப்படிப்பட்டவையென்னில், ஆனந்தஸந்தோஹமே வடிவெடுத்ததென்னலாம்படியான ரஹஸ்யத்ரயத்தின் அக்ஷரக்ரமத்தில் விவரிக்கப்பட்டவை. உரைத்த நாம் எப்படிப்பட்டவர்களென்னில், செம்பொன்மயமான திருவடிகளையுடையளான பிராட்டியோடு கூடிய ஸ்ரீரங்கநாதருக்கு தாஸாநுதாஸர்களாய் பாகவதர்களின் திருவடிகளையே ஶிரோபூஷணமாகக் கொண்டுளோம். ஆக, ஸ்ரீவல்லப ஸ்ரீரங்கநாத தாஸாநுதாஸரான நாம் ஆனந்தகனமான ரஹஸ்யத்ரயத்தினெழுத்தடைவே ஆத்மோஜ்ஜீவனமான ஐம்பத்தொருபொருருள்களை ரஹஸ்யமாத்ருகையில் வெளியிட்டோமென்றாராயிற்று.

அங்கு வெளியிட்டருளின ஐம்பத்தொரு பொருள்களாவன:—

ப்ரணவத்தின் முதலெழுத்தான அகாரத்திலே — 1. எம்பெருமானுடைய ஸர்வ ஜகத்காரணத்வம், 2. ஸர்வரக்ஷகத்வம், 3. நிருபாதிகஸர்வசேஷித்வம், 4. ஜீவனுடைய நித்யநிருபாதிக சேஷத்வம். ப்ரணவத்தின் நடுவெழுத்தான உகாரத்திலே — 5. ஜீவனுடைய அநந்யார்ஹ சேஷத்வம். ப்ரணவத்தின் மூன்றுமெழுத்தான மகாரத்திலே – 6. ஜீவனுடைய தேஹேந்த்ரியாதிவ்யாவ்ருத்தி, 7. ஜ்ஞாநஸ்வரூபத்வம், 8. ஜ்ஞாநாச்ரயத்வம், 9. ஆனந்தஸ்வரூபத்வம், 10. ஸ்வஸ்மைஸ்வயம் ப்ரகாசத்வம், 11. அணுத்வம். நம: என்கிற இரண்டாம் பதத்திலே — 12. இஜ்ஜீவன் அநாதியாக விரோதி கையிலே அகப்பட்டு நின்றமை, 13. எவ்விஷயத்திலும் தனக்கு நிருபாதிக சேஷித்வமில்லாமை, 14. ஒரு கார்யத்திலும் நிரபேக்ஷகர்த்ருத்வமில்லாமை, 15. ஸ்வதந்த்ரஸ்வாமியாலே பாகவத சேஷமாக விநியுக்தனாமை, 16. அநந்யோபாயத்வம், 17. உபாயவிசேஷபரிக்ரஹம்.

நாராயண சப்தத்தில் — 18. அசித்தினுடைய ஸ்வரூபாந்யதாபாவம், 19. ஜீவர்களுக்கு ஸ்வரூபாந்யதாபாவமில்லாமை, 20. க்ஷேத்ரஜ்ஞருடைய ஸ்ருஷ்டிஸம்ஹார விஷயத்வம், 21. சேதநவர்க்கத்தினுடைய ஆநந்த்யம், 22. ஸர்வநியாமகனுடைய ஸ்வரூப ஸ்வபாவ நித்யத்வப்ரகாரம், 23. நேத்ருத்வம், 24. ஸர்வவ்யாபகத்வம், 25. ஸர்வாதாரத்வம், 26. ஸர்வவிதபந்துத்வம், 27. ஸர்வவிதபுருஷார்த்தோபாயத்வம், 28. முக்த ப்ராப்யத்வம், நாராயணசப்தத்தின் மேலுள்ள சதுர்த்தியிலே – 29. நித்யகைங்கர்யம் செய்ய வேண்டும்படி. ஆகவிவை திருமந்த்ரத்தில் அநுஸந்தேயங்களாகத் தெரிவிக்கப்பட்டன.

இனி, த்வயத்தில் முதலெழுத்தான ஸ்ரீ சப்தத்திலே – 30. பிராட்டி வினைதீர்க்கும்படிகள். ஸ்ரீசப்தத்தின் மேலுள்ளமதுப்பிலே — 31. அப்பிராட்டியினுடைய நித்யயோகம். நாராயண சப்தத்தில் — 32. புருஷகாரபலத்தாலே தலையெடுத்த குணபௌஷ்கல்யம். சரணசப்தத்தில் — 33. திவ்யமங்கள விக்ரஹயோகம்: சரணம் என்னுமதில் — 34. கழல்களவையே சரணாகக்கொள்ளுமது. ப்ரபத்யே என்கிற பதத்தில் 35. அத்யவஸாயரூபமான

புத்திவிசேஷம். உத்தமனிலே 36. * புகலொன்றில்லாவடியேனென்று நிற்கிறநிலே. ஸ்ரீமதே என்பதில் – 37. கைங்கர்ய ப்ரதிஸம்பந்திகளான திவ்யதம்பதிகளின் சேர்த்தி. நாராயணாய என்பதில் 38. பரமபோக்யத்வம். நம: என்பதில் 39. கைங்கர்யத்தில் களையற்றபடி.

இனி சரமச்லோகத்தில் ஸர்வதர்மாந் என்பதில் 40. அநுஷ்டேய தர்மங்களின் நாநாவிதத்வம். பரித்யஜ்ய என்பதில் 41. ஆகிஞ்சந்யத்தை முன்னிடுகை. மாம் என்பதில் அவனுடைய 42. ஸௌலப்யம், 43. காருணிகத்வம். ஏகமென்பதிலே, 44. உபாயத்தின் அஸஹாயத்வம். சரணம் என்பதில், 45. அவனுடைய சரண்யத்வ பூர்த்தி. வ்ரஜ என்பதில் 46. அத்யவஸாயம்.

அஹம் என்பதில் 47. ஸர்வசக்தத்வம், த்வா என்பதில் 48. சாதக வ்ருத்தி நிஷ்டை. ஸர்வபாபேப்ய: என்பதில், 49. விரோதி பாஹுள்யம். மோக்ஷயிஷ்யாமி என்பதில், 50. முக்திப்ரதாந சக்தத்வம். மா சுச: என்பதில் 51. இவன் நிர்ப்பரனாய் க்ருதார்த்தனாயிருக்கும்படி. ஆக இவையாம். .... ... ... (13)

யானறியும் சுடராகி நின்றேன் மற்றும் யாதுமலேன்
வானமருந்திருமாலடியேன் மற்றோர் பற்றுமிலேன்
தானமுதாமவன் தன்சரணே சரணென்றடைந்தேன்
மானமிலா வடிமைப்பணி பூண்டமனத்தினனே. (14)

ஜீவாத்மாவான நான் ஜ்ஞாதாவாகவும் ஜ்ஞாந ஸ்வரூபனாகவுமிராநின்றேன்; அசேதநத்திற் காட்டிலும் வ்யாவ்ருத்தனாகவுமிராநின்றேன்; திருநாட்டுத்தலைவனான திருமாலுக்கு அடியேனாயுமிருக்கின்றேன்; அநந்யார்ஹ சேஷபூதனாயுமிராநின்றேன்; அளவுகடந்த கைங்கரியங்கள் செய்வதில் பாரிப்புடையேனாயுமிராநின்றேன். அநுபவிக்க அம்ருதமாயிராநின்ற அப்பெருமானுடைய திருவடிகளையே தஞ்சமாகப்பற்றியிரா நின்றேன்.

இத்தால் ஸ்வாநுபவம்சொல்லும்முகத்தாலே ஜீவாத்மஸ்வரூபத்தை விளங்கவைத்தாராயிற்று. அறியுஞ் சுடராகிநின்றேனென்பதை அறியுமவனாயும் சுடராயுமிராநின்றேனென்று இரண்டுவார்த்தையாக யோஜித்துக்கொள்ளவேணும். தன்னை யொழிந்த பொருள்களைத் தர்மபூதஜ்ஞானத்தால் அறியுமவனாயிருப்பதும், ஸ்வஸ்மைஸ்வயம்ப்ரகாசனாய் தன்னை அறிவதற்கு வேறொரு ஜ்ஞானம் வேண்டாதபடி ஜ்ஞானஸ்வரூபியாயிருப்பதும் ஆத்மாவின் தன்மையென்று தெரிவிக்கப்பட்டதாயிற்று. ... ... (14)

சீலங்கவர்ந்திடுந் தேசிகர் தேசின் பெருமையினால்
தூலங்களன்ன துரிதங்கள் மாய்ந்தன துஞ்சல் தரும்
கோலங்கழிந்திடக் கூறியகாலங் குறித்துநின்றோம்
மேலிங்குநாம்பிறவோம் வேலைவண்ணனை மேவுதுமே. (15)

ஜ்ஞாநாநுஷ்டாநஸம்பந்நர்களான ஆசாரியர்களின் தேஜ:ப்ரபாவத்தினால் பாவங்கள் தீயினில் தூசாயின. மருளைத் தருமிந்த மாயவுடல்கழிவதற்கு எம்பெருமான் ஸங்கல்பித்ததொரு காலவிசேஷத்தை நிரீக்ஷித்துக்கொண்டிராநின்றோம். இனி இவ்விருள்தரு மாஞாலத்திலே நாம் பிறக்கமாட்டோம்; கடல் வண்ணனான பெருமானை [பரமபத நாதனைப்] பெற்றுவிடுவோம். ... ... ... ... ... (15)

வண்மையுகந்தவருளால் வரம்தருமாதவனுர்
உண்மையுணர்ந்தவரோதுவிக்கின்ற உரைவழியே
திண்மைதருந் தெளிவொன்ருல் திணியிருள் நீங்கியநாம்
தண்மைகழிந்தனம் தத்துவங்காணும் தரத்தனமே. (16)

ஔதார்ய விசிஷ்டமான பரமக்ருபையினுலே வேண்டியவற்றைத் தந்தருள்கின்ற எம்பெருமானுடைய ஸ்வரூபஸ்வபாவங்களை உள்ளபடியுணர்ந்த ஆசாரியர்கள் உபதேசித் தருளும் ரஹஸ்யங்களின் வழியாக வுண்டாகின்ற த்ருடாத்யவஸாய ஜநகமான தெளிந்த ஜ்ஞானத்தினுல் பிறங்கிருள் நீங்கப்பெற்ற நாம் நீசத்தன்மை நீங்கப்பெற்றோம்; தத்வ தர்சிகளின் கோஷ்டியிலே சேரப்பெற்றோம்.

ப்ரபந்நர்களுக்கெல்லாம் இப்பேறு பெறலாகுமென்றருளிச் செய்ய வேண்டி இங்ஙனே ஸ்வலாபத்தைப் பேசினாராயிற்று. ஸ்வலாபத்தைப் பேசினவிது பிறர்க்கு நேரப் போகும் லாபத்தைப் பேசினபடியென்க. இப்பாசுரமும் மேற்பாசுரமும் தத்வரத்நாவளீ ரஹஸ்யத்தைச்சேர்ந்தவை. ... ... ... .... (16)

நாராயணன் பரன் நாமவனுக்கு நிலையடியோம்
சோராதனைத்து மவனுடம்பென்னும் சுருதிகளால்
சீரார் பெருந்தகைத் தேசிகரெம்மைத் திருத்துதலால்
தீராமயலகற்றுந் திறம்பாத் தெளிவுற்றனமே. (17)

ஸ்ரீமந்நாராயணனே பராத்பரனென்றும், நாம் அவனுக்கு நித்யதாஸபூதர்களென்றும், சேதநாசேதநாத்மக ஸகலபதார்த்தங்களும் அவனுக்கு சரீரபூதங்களென்றும் தெரி விக்கிற வேதவாக்குக்களைக்கொண்டு பரமகாருணிகர்களான ஆசாரியர்கள் எம்மைத் திருத்திப் பணிகொண்டதன் பயனாக நாம் அஜ்ஞாநாந்தகார நிராஸ ஹேதுவான நித்ய நிர்மல ஜ்ஞானத் தைப் பெற்றோம். இதுவும் முன்பாசுரம்போலே பாலாபத்தைப் பேசுவதில் பர்யவஸிக்கும்.

ஒன்றே புகலென் றுணர்ந்தவர் காட்டத் திருவருளால்
அன்றே யடைக்கலங் கொண்டநம் அத்திகிரித்திருமால்
இன்றே யிசையி லிணையடி சேர்ப்பர் இனிப்பிறவோம்
நன்றே வருவதெல்லாம் நமக்குப் பரமொன்றிலதே. (18)

ஸ்ரீமந்நாராயணனொருவனே தஞ்சமென்று உணர்ந்தவர்களான ஸதாசார்யர்கள் நம்மை அவன் திருவடிகளிலே காட்டிக்கொடுக்க அப்போதே நம்மை ரக்ஷ்யவஸ்துவாகத் திருவுள்ளம் பற்றிய பேரருளாளப் பெருமாள்-இப்பொழுதே நாம் திருவடி சேர இசைந்தால் தம்முடைய உபய பாதங்களிலே நம்மைச் சேர்த்துக் கொள்வர். இனி யொருநாளும் இவ்விருள் தரு மாஞாலத்தில் பிறக்கமாட்டோம்; இங்கிருக்கும் நாளில் நமக்கு இன்ப துன்பங்களில் எது நேர்ந் தாலும் அது நன்றேயாகும்; இனி நாம் ஆத்மோஜ்ஜீவனத்திற்காகச் செய்யவேண்டுவது யாதொன்றுமில்லை. "निर्भरो निर्भयोऽस्मि" என்றிருக்க வடுக்கும். ... ... (18)

சிறுபயனிற் படியாத தகவோ ரெம்மைச் சேர்க்கவடைக்கலங்கொண்ட திருமால்தானே
மறுபிறவி யறுத்தழியா வானில் வைக்கும் மனமேநீ மகிழாதே யிருப்ப தென்கொல்
உறுவதுனக் குரைக்கேனிங் கிருந்த காலம் ஒருபிழையும் புகுதாத வுணர்த்தி வேண்டிப்
பெறுவதெலா மிங்கேநாம் பெற்று வாழப் பேரடிமை யாலேதென் றிகழேல் நீயே. (19)

சிற்றின்பங்களில் நசைபண்ணும் சீலவான்களான பேராசிரியர்கள் எம்மை எம்பெருமான் திருவடிகளிலே கொண்டு சேர்க்க நம்மைக் கைக்கொண்ட ஸ்ரீமந்நாராயணன் தானே ஸம்ஸார ஹேதுவான கருமங்களை யெல்லாம் போக்கி நித்ய விபூதியிலே சேர்த்தருள்வன். இப்படியிருக்க, நெஞ்சே! நீ மகிழாமல் சோகித்திருப்பது என்கொல்? நீ இங்கிருக்கவேண்டும் நாள் வரையில் உனக்குக் குறிக்கொள்ளத் தக்கதொன்று சொல்லுகேன் கேள்; பகவதபசார பாகவதாபசாராதிகளான அபசாரங்களில் யாதொன்றும் ஸம்பவியாமைக்குறுப்பான அத்யவஸாயத்தை வேண்டி முக்த போகாவளிகளை யெல்லாம் நாம் இங்கே பெற்று வாழலாம்படி, காயக்லேசரூபமாய் அதஏவ துக்க ரூபமான கைங்கரியத்தினால் யாது பயனென்று நீ இகழ்ச்சி கொள்ளாதிருக்கு மத்தனையே வேண்டுவது. .... ... (19)

சாக்கியர் சைனர்கள் சார்வாகர் சாங்கியர் சைவர் மற்றும்
தாக்கியர் நூல்கள் சிதையத் தனிமறை யின்கருத்தை
வாக்கியம் முப்பதி னுல்வகை செய்து வியாகரித்தோம்
தேக்கி மனத்தி லிதனைத் திணியிருள் நீங்குமினே. (20)

பௌத்த ஜைந சார்வாக ஸாங்க்ய பாசுபத தார்க்கிகாதிகளின் மதநூல்கள் தொலையும்படி ஒப்பற்ற வேததாத்பரியத்தை முப்பது வாக்கியங்களமைந்த இந்த ரஹஸ்ய ரத்நாவளீ ஹ்ருதயமென்னும் ரஹஸ்யத்தினால் வகுத்துக்காட்டி விளக்கினோம்; இந்த ரஹஸ்ய நூலை உங்கள் உள்ளத்துள்ளே தேக்கிப் பிறங்கிருள் நீங்கப் பெறுவது நலம்.

இப்பாசுரமும் மேலிரண்டு பாசுரங்களும் ரஹஸ்யரத்நாவளீ ஹ்ருதயத்தைச் சேர்ந்தவைகள். ... ... ... ...

தள்ளத் துணியினுந் தாய்போ லிரங்குந் தனித்தகவால்
உள்ளத் துறைகின்ற வுத்தமன் தன்மை யுணர்ந்துரைத்தோம்
முள்ளொத்த வாதிகள் முன்னே வரின்எங்கள் முக்கியர்பால்
வெள்ளத் திடையில் நரிபோல் விழிக்கின்ற வீணர்களே. (21)

நாம் எம்பெருமானை உபேக்ஷிக்கத் துணிந்தாலும் குழந்தையை விடமாட்டாத தாய்போல் நம்மை விடமாட்டாத கருணையினால் நம் உள்ளத்துள்ளே யுறைகின்ற புருஷோத்தமனுடைய ஸ்வரூபஸ்வபாவங்களை உள்ளபடியறிந்து இந்த ரஹஸ்யத்தில் வெளியிட்டோம்; நமது தரிசனத்திற்கு முள்போன்று வேதனை செய்பவர்களான வாதிகள் எங்களாசார்யர்களினெதிரே வாதத்திற்கு வந்தால் வெள்ளத்திடைப்பட்ட நரியினம்போலே இன்னது செய்வதென்று தெரியாமல் திகைக்கின்ற வம்பர்களா யொழிவர்கள். .... ... (21)

செய்யேல் மறமென்று தேசிகன் தாதை யவனுரைத்த
மெய்யே யருள்பொருள் சூடிய வெண்மதி காதலியாம்
பொய்யே பகைப்புல னையிரண் டொன்று பொருங்கருவி
கையேறு சக்கரக் காவலன் காவ லடைந்தவர்க்கே. (22)

* லக்ஷ்மீநாத ஸமாரம்பாம்* என்னும்படி நமது குருபரம்பரையில் ப்ரதம ஆசாரியனும் உலகுக்கெல்லாம் தந்தையுமான பெருமான் 'செய்யேல் தீவினை' யென்று சாஸ்த்ரமுகமாகக் காட்டியதும் ஸத்யம் பொருந்தியதும் க்ருபாஸ்பதமுமான அர்த்தத்தை சிரஸாவஹிக்கின்ற பரிசுத்த மனஸ்ஸானது பத்தினியைப்போல் ப்ரியமாகும். அநித்தியமான இவ்வுடலே

இந்திரியங்களுடன் யுத்தஞ் செய்வதற்கேற்ற போர்க்களமாகும். ஐந்து மிரண்டு மொன்று மான எட்டுத் திருவக்ஷரங்கள் கொண்ட பெரிய திருமந்த்ரமே போர்புரியுங் கருவியாகும்; யாருக்கென்னில்; திருக்கையிலேந்திய சக்கரப் படையையுடையனான ஸர்வ ரக்ஷகனுடைய ரக்ஷணத்திலொதுங்கின ப்ரபந்நர்களுக்கு.

மூன்றுமடியில், ஐ இரண்டொன்று என்பதற்கு-அதிசயாவஹமான ரஹஸ்யத்ரயம் என்று பொருளுரைப்பாருமுளர். ... ... ... (22)

அந்தமிலாதிதேவனழிசெய்தடைத்தவலேவேலேயோதமடையச்
செந்தமிழ் நூல்வகுத்த சிறுமாமனிச்சர் சிறுகைச்சிருங்கையதுபோல்.
சந்தமெலாமுரைப்பவிவையென்றுதங்களிதயத்தடக்கியடியோம்
பந்தமெலாமறுக்கவருள்தந்துகந்து பரவும்பொருள்களிவையே. (23)

ஒருநாளும் தனக்கு அழிவில்லாதவனும் ஸகல ஜகத்காரணபூதனுமான பகவான் பிரளய காலத்திலேயழித்துப் பிறகு ஸ்ருஷ்டித்த அலை யெறிகின்ற கடல் நீர் முழுவதையும் ஒரு ஸமய விசேஷத்திலே சிறுமாமனிசரான தமிழ்மாமுனி [அகஸ்த்ய மஹர்ஷி] தனது சிறிய சுளகத்திலே அடக்கிவிட்டதுபோல, ஆசாரியர்கள் வேதப் பொருள்களை யெல்லாம் தங்கள் மனத்துள்ளே யடக்கிவைத்திருந்து, அடியோமுடைய கருமவன்பாசங்களை யெல்லாமொழிக்க நம்மீது கருணைகொண்டு உகப்புடனே நமக்கு உபதேசித்த பொருள்களேயாகுமிவை. இவை என்றது - தத்வத்ரய சுளகமென்னும் ரஹஸ்யத்தில் தாம் கூறியவற்றை. சிறுமாமனிச்சர்— *சிறுமாமனிசராயென்னை யாண்டார்* என்ற திருவாய்மொழிப் பாசுரத்திற்குப் பெரியார் அருளிச்செய்த பொருள் இங்குக் காணத்தக்கது; வடிவு சிறுத்து அறிவு பெருத்தவர் என்கை. சந்தம்—வேதம்; छन्दस् என்னும் வடசொற் சிதைவு. இதயம்—ஹ்ருதயம். பந்தம்—बन्ध மென்ற வடசொல் விகாரம், ... ... (23)

முக்குண மாயையின் மூவெட்டின் கீழ்வரு மூவகையும்
இக்குண மின்றி யிலங்கிய காலச் சுழியினமும்
நற்குண மொன்றுடை நாகமும் நாராயணனுடம்பாய்ச்
சிற்குண மற்றவை யென்றுரைத் தாரெங்கள் தேசிகரே. (24)

ஸத்வரஜஸ்தமோகுணமயமான மூலப்ரக்ருதியின் இருபத்து நான்கு தத்துவங்களின் கீழ்ப் பிரிகின்ற ப்ரக்ருதி, விக்ருதி, ப்ரக்ருதிவிக்ருதி யென்கிற மூன்று வகையும், இந்த மூன்று வகையுமில்லாமல் பிரகாசிக்கின்ற காலசக்ரத்தின் வகுப்பும், ஸத்வகுண மொன்றையே யுடைய பரமபதமாய்ப் பரிணமிக்கின்ற சுத்த ஸத்வமுமாகிற இந்த மூன்று அசேதநமும் எம் பெருமானுக்குச் சரீரமாய் அறிவென்னுங் குணமில்லாதவை யென்று, [அதாவது, ப்ரக்ருதி, காலம், சுத்த ஸத்வம் ஆகிய மூன்றும் அசேதநமாய் எம்பெருமானுக்குச் சரீரமாகின்றன வென்று] அஸ்மதாசார்யோபதேசம்.

முக்குணமாயை யென்றவிடத்து "अजामेकां लोहितशुक्लकृष्णाम्" [அஜாமேகாம் லோஹித சுக்லக்ருஷ்ணாம்] என்ற உபநிஷத்வாக்ய மநுஸந்தேயம். மூவெட்டின் என்றவிடத்து * பொங் கைம்புலனும் பொறியைந்தும் கருமேந்திரிய மைம்பூதம் இங்கிவ்வுயிரேய் பிரகிருதி,

மானுங்காரமனங்களே * என்கிற திருவாய்மொழிப் பாசுர மநுஸந்திக்கவுரியது. இப்பாட்டும் இதற்கு முன்பாட்டும் தத்வத்ரய சுளகத்தில் அசேதநாதிகாரத்திற் சேர்ந்தவை. ... (24)

எனதென்பதுமியானென்பது மின்றித்
தனதென்று தன்னையுங் காணாது—உனதென்று
மாதவத்தால் மாதவற்கே வன்பரமாய் மாய்ப்பதனில்
கைதவத்தான் கைவளரான் காண். (25)

'இவை என்னுடையவை' என்று கொள்ளுகையாகிற மமகாரமும் தேஹாத்ம ப்ரமமாகிற அஹங்காரமும் நீங்கப்பெற்று, ஜீவாத்மாவாகிற தன்னையும் ஸ்வதந்திரமாக நினையாமல், மிகச் சிறந்த தபஸ்ஸென்று உபநிஷத்துக்களிலோதப்படுகின்ற சரணாகதியினால் 'எல்லாம் உன்னுடையதே' என்று கொண்டு திருமாலுக்கே திடமான பொறுப்பாக்கித் தன்னுடைய ஸம்பந்த கந்தமுமின்றி அவனிடம் ஸமர்ப்பிக்குமளவில் ஆத்மாபஹாரக் கள்வனான இந்த ஸம்ஸாரி சேதநன் கள்வத்தில் கைவளரமாட்டான். மாதவத்தால் என்றவிடத்து*तस्मान्न्यास-मेषां तपसामतिरिक्तमाहुः* என்கிற உபநிஷத்வாக்ய முணரத்தக்கது. கைதவத்தானென்றவிடத்து कैतव மென்பது வடசொல். *योऽन्यथा सन्तमात्मानमन्यथा प्रतिपद्यते । किं तेन न कृतं पापं चोरेणात्मापहारिणा* என்றவிடத்துச் சொல்லப்பட்ட கைதவமுடையவனென்கை. [கைவளரான்.] ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணுதவளவில் தன்னுடைய கைதவம் கைவளரப் பெறுவன்; அது பண்ணி விடுமளவில் கைதவம் தொலைந்தவனாவான் என்பது தாற்பரியம். காண் என்றது தேற்றத்தினால். இச்செய்யுளும் அடுத்த செய்யுளும் தத்வத்ரய சுளகத்தின் ஜீவாதிகாரத்திற் சேர்ந்தவை. ... .... ... (25)

பல்வினை வன்கயிற்றால் பந்தமுற்றுழல்கின்றனரும்
நல்வினை மூட்டிய நாரணனார் பதம்பெற்றவரும்
தொல்வினை யென்றுமில்லாச் சோதிவானவருஞ்சுருதிச்
செல்வினை யோர்ந்தவர் சீவரென்றோதச் சிறந்தனரே. (26)

பலவகைப்பட்ட கரும பாசங்களினால் கட்டுப்பட்டுப் பிறப்பது மிறப்பதுமாக ஸம்ஸரிக்கின்ற बद्धात्मा (பத்தாத்மா)க்களும், ஸ்வரூபாநுரூபமான உபாயத்தை யனுஷ்டித்து அப்படிப்பட்ட நாராயணனுடைய திருவடிகளைச் சென்று கிட்டப் பெற்றவர்களான முக்தாத்மாக்களும், அநாதியான கர்ம பந்தத்தில் ஒருநாளும் அந்வயமில்லாதவர்களாய் சோதிவானவரென்று சொல்லப்படுகிற நித்ய ஸூரிகளும் ஜீவர்களென்று உபதேசிக்கப்பெற்றுச் சதிர்த்தோம்; இங்ஙனே உபதேசித்தவர்கள் யாவரென்னில் [சுருதி செல்வினையோர்ந்தவர்]—வேதம் போகிற வழியை ஆய்ந்தறிந்த நம் ஆசார்யர்கள்.

अनाद्यचित्सम्बन्ध - तद्वियोग - तदनन्वयங்களாலே பத்த முக்த நித்யரூபேண ஆத்ம ஸ்வரூபம் த்ரிப்ரகாரமாயிருக்கும்படியை ஸதாசார்ய ஸந்நிதியிலே கேட்டுத் தெளிவது என்பது பரமதாத்பர்யம். ... ... ... (26)

ஆரணங்க ளெல்லா மடிசூட மேல்நின்ற
காரணமா யொன்றுற் கலங்காதான்—நாரணனே

நம்மேல் வினைகடியும் நல்வழியில் தானின்று
தன்மேனி தந்தருளுந் தான். (27)

ஸகல வேதங்களும் தன் திருவடிகளைப் போற்றும்படி ஸர்வோத்துங்கனாய் விளங்குபவனும், ஸகலஜகத் காரணபூதனாயிருந்துவைத்துக் கார்யபூத பதார்த்தங்களிலுள்ள தோஷங்களில் ஒன்றும் தன்னிடத்து ஸம்பந்திக்கப் பெறாதவனுமான ஸ்ரீமந்நாராயணனே நம்மிடம் மேன் மேலும் வளர்கின்ற வினைகளை விலக்கக்கூடிய நல்ல உபாயத்தின் ஸ்தானத்தில் தான் நின்று தனது திருமேனியை நாமநுபவிக்கத் தானே தந்தருள்வன்.

எவ்வெவ் வுபாயங்கள் நமக்கு துஷ்கரங்களாகின்றனவோ அவ்வவ்வுபாயங்களின் ஸ்தானத்தில் எம்பெருமான் தானே நின்று ஒரு குறையுமின்றிப் பரம புருஷார்த்தத்தை யளித் தருள்வனென்னுமிடத்தை ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் சரமச்லோகாதிகாரத்தில்

* सुदुष्करेण शोचेद्यो येन येनेष्टहेतुना । स स तस्याहमेवेति चरमश्लोकसंग्रहः ॥ *

என்கிற ச்லோகத்தினாலும் காட்டியருளினர். இப்பாசுரம்முதல் நான்கு பாசுரங்கள் தத்வத்ரய சுளகத்தின் ஈச்வராதிகாரத்திற் சேர்ந்தவை. ... ... (27)

குடல்மிசை யொன்றியுங் கூடியும் நின்ற கொடுந்துயரும்
உடல்மிசை தோன்று முயிரு முயிர்க்குயி ராமிறையும்
கடல்மிசைக் கண்டதரளத் திரளவை போர்த்தபொன்னூல்
மடல்மிசை வார்த்தை யதன்பொரு ளென்ன வகுத்தனமே. (28)

உடலிலே ஒன்றுபட்டும் சேர்ந்து மிருப்பதாய்க் கொடிய துன்பத்தை விளைப்பதான ப்ரக்ருதி யென்கிற அசித்தும், சரீரத்திலிருந்துகொண்டு நடத்துமவனான ஜீவாத்மாவென்னும் சித்தும், அந்த ஆத்மாவுக்கும் ஆத்மாவாயிருக்கின்ற ஸர்வேச்வரனும்—கடலாகவும், அக்கடலிலுள்ள முத்துத் திரளாகவும், முத்துக்கள் கோத்த பொன்னூலாகவுமிருக்கின்ற விஷயம் (ஆசாரியர் களின் திருவாக்குமூலமாக) நமது காதிலேறிய விஷயமென்று தத்வத்ரய சுளகமென்னு மிந்த ரஹஸ்யத்தில் வகுத்துரைத்தோம். மடல்—செவிமடலென்றபடி.

பகவத்கீதையில் ஏழாமத்யாயத்தில் * मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव * என்ற பகவத் வாக்யத்தைத் தழுவியது இப்பாசுரம். "सर्वमिदं चिदचिद्वस्तुजातं कार्यावस्थं कारणावस्थं च मच्छरीरभूत सूत्रे मणिगणवत् आत्मतयाऽवस्थिते मयि प्रोतम् – आश्रितम्" என்பது பாஷ்யஸூக்தி. கடலின் ஸ்தானத்திலே அசித்தையும், முத்துத்திரளின் ஸ்தானத்திலே ஜீவாத்மாக்களையும் அவை கோத்த பொன்னூலின் ஸ்தானத்திலே ஈச்வரனையும் கொள்வது.

குடல், உடல்—இரண்டும் ஸமாநார்த்தகங்கள். ஒரேப்ரயோகத்தில் ஒரு பொருளை இருசொற்களால் காட்டுவது முறையன்று; குடல் வேறாகவும் உடல் வேறாகவுமிருந்தால் இங்ஙனே பிரயோகம் பொருந்தும். உடன்மிசை யென்பதற்கு முன்னே அகரச்சுட்டு கூட்டிக்கொண்டால் ஒருவாறு பொருந்தும். இங்குப் பாடப்பிறழ்வு ஏதேனுமிருக்குமோ வென்று சிந்தனையுள்ளது. ... ... ... (28)

தத்துவந் தன்னில் விரித்திடத் தோன்று மிரண்டுதன்னில்
பத்தி விலக்கிய பாசண்டர் வீசுறும் பாசமுறா

எத்திசையுந்தொழுதேத்திய கீர்த்திய ரெண்டிசையார்
சுத்த ருரைத்த சுளக மருந்திய தூயவரே. (29)

(பின்னடிகளை முன்னே யோஜிப்பது.) எத்திசையிலுள்ளாரும் தொழுதேத்தும்படியான மஹாயசஸ்விகளாய், எல்லாப்படிகளாலும் பொருந்திய தூய்மையை யுடையவர்களான நம் ஆசாரியர்கள் உபதேசித்த விஷயங்களைக் கொண்ட இந்த தத்வத்ரய சுளகமென்னும் ரஹஸ்யத்தை அநுபவிக்கும் பரமபாவநர்களான ஆஸ்திகர்கள் — தத்துவங்கள் மூன்றினுள் விவரித்துரைக்கும்போது முக்கியமாய்த் தோன்றுகிற சேதந—ஈச்வரர்களாகிற இரண்டு தத்வங்களில் உண்மையுணர்வு அற்றவர்களான நாஸ்திகர்கள் வீசுகின்ற டூயவலையில் சிக்கிக்கொள்ள மாட்டார்கள். ஈற்றடியில் "சுளகமறிந்தவத்தூயவரே" என்று சிலர் பாடம். ... (29)

வினைத்திரள் மாற்றிய வேதியர் தந்தநல் வாசகத்தால்
அனைத்து மறிந்தபி னாறும் பயனு மெனவடைந்தோம்
மனத்தி லிருந்து மருந்தமு தாகிய மாதவனார்
நினைத்தன் மறத்த லரிதாய நன்னிழல் நீள்கழலே. (30)

நமது பாபராசிகளை வேரறவறுத்த வைதிகோத்தமர்களான ஸதாசார்யர்கள் உபதேசித்தருளின நல்வார்த்தைகளாலே தத்வஹித புருஷார்த்தங்களை நாமறியப்பெற்ற பின்பு, நமது உள்ளத்துள்ளே உறைந்திருந்து உபாயமும் உபேயமுமாக விளங்குபவனான ஸர்வேச்வரனுடையதான—பெருமையைப்பற்ற நினைக்க முடியாததும், இனிமையைப்பற்ற மறக்கமுடியாததும், ஸம்ஸார தாபதப்தர்களுக்கு நல்ல நிழலைத் தருமதும் பெருமை பெற்றதுமான திருவடியையே ஸாதனமும் ஸாத்யமுமாகக் கொண்டடைந்தோம். [மருந்தமுதாகிய மாதவனார்.] மருந்து என்பதனால் ஸம்ஸார பேஷஜமாயிருக்குந் தன்மை சொல்லப்பட்டு அதனால் உபாயத்வம் சொல்லிற்றுகிறது. அமுது என்பதனால் போக்யதை சொல்லப்பட்டு அதனால் உபேயத்வம் சொல்லிற்றுகிறது. இப்படி மூன்றாமடியில் எம்பெருமானுக்குச் சொன்ன உபாயோபேயத்வங்களை இரண்டாமடியில் அவனது திருவடிக்கும் 'ஆறும் பயனும்' என்பதனால் சொல்லப்பட்டது. இத்தால் எம்பெருமானது தன்மையும் திருவடியின் தன்மையும் வேறுபட்டதன்றென்று காட்டப்பட்டதாயிற்று. ... ... (30)

ஓதுமறை நான்கதனி லோங்குமொரு மூன்றினுள்ளே
நீதிநெறி வழுவா நிற்கின்றோம்—போதமரும்
பேராயிரமுந் திருவும் பிரியாத
நாரா யணனருளால் நாம். (31)

போது அமரும் பேராயிரமும்—போத (बोध) த்தைத் தருவதிலே அமர்ந்திருக்கின்ற ஸஹஸ்ரநாமமும்; போது அமரும் திருவும் பிரியாத— * போதமர் செல்வக் கொழுந்தான பெரிய பிராட்டியாரும் எப்போதும் அந்வயித்திருக்கப்பெற்ற நாராயணனுடைய திருவருளாலே, [இதற்கு 'நீதிநெறி வழுவாநிற்கின்றோம்' என்பதிலே அந்வயம்.] ஓதப்படுகின்ற நால்வேதங்களிற் காட்டிலும் சிறந்து விளங்குகின்ற ரஹஸ்யத்ரயத்திலே தெரிவிக்கப்பட்ட ஸத்ஸம்ப்ரதாயஸரணியில் நாம் தவறுதலின்றியே நிலைபெற்றிருக்கின்றோம்.

போது என்னுந் தமிழ்ச் சொல் புஷ்பத்திற்கு வாசகமென்பது ப்ரஸித்தம். இச் சொல்தானே बोध: என்னும் வடசொல்லின் சிதைவாகி அறிவுக்கு வாசகமாவது முண்டு; * போதிற்கமல வன்னெஞ்சம் * என்ற பெரியாழ்வார் திருமொழியுங் காண்க. இப்பாட்டும் மேற்பாட்டும் ரஹஸ்யத்ரய சுளகம் திருமந்த்ராதிகாரத்திற் சேர்ந்தவை. ... (31)

ஊன்தந்து நிலைநின்ற வுயிருந் தந்தோர் உயிராகி யுள்ளொளியோ டுறைந்த நாதன்
தான்தந்த வின்னுயிரை யெனதென் னுமல் நல்லறிவுந் தந்தகலா நலமுந் தந்து
தான்தந்த நல்வழியால் தாழ்ந்த வென்னைத் தன்றனக்கே பரமாகத் தானே யெண்ணி
வான்தந்து மலரடியுந் தந்து வானோர் வாழ்ச்சிதர மன்னருளால் வரித்திட்டானே. (32)

உடலைக் கொடுத்தும், நிலைநின்ற உயிரைக் கொடுத்தும், உயிர்க்கு முயிராகி நின்றும் தன்னுடைய வொளியே ஒரு வடிவெடுத்த தென்னலாம்படியான பிராட்டியோடு கூட சேதநா சேதநங்களுள் உறைந்திருந்தும் இப்படி பஹுமுகமாக வுபகரிப்பவனான ஸர்வேச்வரன் தான் கொடுத்தருளின நல்ல ஜீவாத்மாவை ஸ்வதந்திர மென்று கொள்ளாமலிருக்கும்படி நல்ல அறிவையுங் கொடுத்து, நித்யானந்தத்தையுங் கொடுத்து, எல்லாவற்றிலும் சீரிதாகக் கொடுத்த சரணாகதி யோகத்தினால் தன் திருவடிக்கே வந்து வணங்கிநின்ற வென்னைத் தனக்கே ரக்ஷ்ய வஸ்துவாகத் திருவுள்ளம்பற்றி க்ரமேண திருநாட்டையுங் கொடுப்பதாகவும் திருவடித் தாமரையையுங் கொடுப்பதாகவும் முக்த போகாவளிகளையுங் கொடுப்பதாகவும் ஸங்கல்பித் தருளினான். [இவையன்றோ அவன் செய்யும் சேமங்களென்று உள்குழைகின்றாராயிற்று].

திருமா லடியிணையே தின்சரணக்கொண்டு
திருமா லடியிணையே சேர்வார் —ஒருமால்
அருளா லருளாத வானோர்கள் வாழ்ச்சி
அருளால் நமக்களித்தா ராய்ந்து. (33)

பிராட்டியோடிணைபிரியாத பெருமானுடைய உபய பாதங்களையே திடமான அரணாக அத்ய வஸித்து அத்திருமாலடியிணையையே ப்ராபிக்கும்வர்களான ஆசாரியர்கள் – எம்பெருமான் கூடத் தன்னருளால் நமக்கருளாத வானவர் போகத்தைத் தங்களுடைய ஒப்பற்ற கருணையினால் நமக்கு உற்றதென்று உணர்ந்து அநுக்ரஹித்தார்கள். எம்பெருமானுடைய அருளைக் காட்டிலும் ஆசாரியர்களின் அருள் மிகச் சிறந்ததென்றவாறு. ... ... (33)

சேர்க்குந் திருமகள் சேர்த்தியில் மன்னுதல் சீர்ப்பெரியோற்கு
ஏற்குங் குணங்க ளிலக்காம் வடிவி லிணையடிகள்
பார்க்குஞ் சரணத்திற் பற்றுதல் நன்னிலை நாம்பெறும்பேறு
ஏற்கு மவற்றினு ளெல்லாங் களையற வெண்ணினமே. (34)

த்வயமென்னும் மந்த்ர ரத்னத்தில் அடைவே தேறுகின்ற பொருள்களை இப்பாட்டிலருளிச் செய்கிறார். பட்டர் அஷ்டச்லோகியில்

नेतृत्वं नित्ययोगं समुचितगुणजातं तनुख्यापनं चोपायं कर्तव्यभागं त्वथ मिथुनपरं प्राप्यमेवं प्रसिद्धम् ।
स्वामित्वं प्रार्थनां च प्रबलतरविरोधिप्रहाणं दशार्थान् मन्तारं त्रायते चेत्यधिगतनिगमः षट्पदोऽयं द्विखण्डः ॥

என்றருளிச்செய்த ச்லோகத்தையே பெரும்பாலும் தழுவி யருளிச்செய்கிறார். சேர்க்குந் திருமகள்—புருஷகாரக்ருத்யம் செய்பவளான பிராட்டி. (இது ஸ்ரீசப்தார்த்தம்.) சேர்த்தி யின் மன்னுதல்—அப்பிராட்டியின் நித்யயோகம். (இது மதுப்பின் அர்த்தம்; *नित्ययोगे मतुप्* என்பர்.) சீர் பெரியோற்கு ஏற்கும் குணங்கள்—திருக்கல்யாண குணங்களினால் பெருமை பெற்றவனான எம்பெருமானுடைய ப்ரக்ருதோபயோகியான திருக்குணங்கள். (இது நாராயண பதத்தின் அர்த்தம்]. "புருஷகார பலத்தாலே ஸ்வாதந்த்ர்யம் தலைசாய்ந்தால் தலையெடுக்கும் குணங்களைச் சொல்லுகிறது நாராயணபதம். அவையாவன, வாத்ஸல்யமும் ஸ்வாமித்வமும் ஸௌசீல்யமும் ஸௌலப்யமும் ஜ்ஞானமும் சக்தியும். குற்றங்கண்டு வெருவாமைக்கு வாத்ஸல்யம்; கார்யம் செய்யுமென்று துணிகைக்கு ஸ்வாமித்வம்; ஸ்வாமித்வங் கண்டு அகலாமைக்கு ஸௌசீல்யம்; கண்டு பற்றுகைக்கு ஸௌலப்யம்; விரோதியைப் போக்கித் தன்னைக் கொடுக்கைக்கு ஜ்ஞான சக்திகள்." என்கிற ஸ்ரீஸூக்திகளை இங்கே அநுஸந்திப்பது. பட்டரும் நாராயண சப்தார்த்தமாக "ஸமுசித குணஜாதம்" என்றே அருளிச்செய்தது காண்க.

இலக்கு ஆம் வடிவில் இணையடிகள்—சரணாகதிக்கு லக்ஷ்யபூதமாய், திருமேனியில் ஒரு பகுதியாயிருக்கின்ற திருவடியிணை. (இது चरणौ என்றதின் அர்த்தம்.) பட்டர் ' तनुख्यापनम् ' என்றருளிச் செய்ததை யடியொற்றி இடையே வடிவில் என்றருளிச் செய்தது. "இத்தால்—பிராட்டிக் கிருப்பிடமாய் குணப்ரகாசகமுமாய் சிசுபாலனையு மகப்படத் திருத்திச் சேர்த்துக்கொள்ளும் திருமேனியை நினைக்கிறது" என்ற ஸ்ரீஸூக்தியையும் அடியொற்றினபடி. பார்க்கும் சரண்—குறிக் கொள்ளப்படுகிற உபாய பாவம். (இது சரணம் என்றதின் அர்த்தம்]. அதில் பற்றுதல்—இது ப்ரபத்யே என்பதன் அர்த்தம். நல்நிலை—கைங்கரியம் கொள்ளுதற்காக திவ்ய தம்பதிகள் சேர்த்திகொண்டிருக்கும் நல்ல நிலை. (இது உத்தரகண்டத்தில் ஸ்ரீமதே என்றதின் பொருள்.) நாம் பெறும் பேறு—நாம் பரம புருஷார்த்தமாகப் பெறக்கடவதான கைங்கரியம். (இது நாராயணாய என்றவிடத்துச் சதுர்த்தியின் அர்த்தம். "இந்த சதுர்த்தி கைங்கர்ய ப்ரார்த்தனையை ப்ரகாசிப்பிக்கிறது" என்ற ஸ்ரீஸூக்தி காண்க.) ஏற்கின்ற எல்லைகள்—கீழ்ச்சொன்ன பகவத் கைங்கரியத்திற்கு எல்லை நிலமாக விளைகின்ற ஆசார்ய கைங்கர்ய பாகவத கைங்கர்யாதிகள். (இவையும் நாராயணாய வென்றவிடத்தில் அநுஸந்திக்கப்படவேண்டிய பொருளாதல் அறிக.) எல்லாக் களையறவு—கைங்கர்யத்தில் களையறுக்கிறது முடிவிலுள்ள நமःபதம். களையாவது தனக்கென்னப் பண்ணுமது; அதாவது * भोक्ताऽहम् मम भोगोऽयम् * என்கிறபடியே இதனைத் தன்னுடைய ரஸத்துக் குறுப்பாக நினைத்துப் பண்ணுகை. பகவன்முகவிகாஸஹேதுவாகையாலே இது நமக்கு ஆதரணீயம் என்கிற ப்ரதிபத்தி யொழிய இதில் போக்த்ருத்வப்ரதிபத்தியும் ஸ்வார்த்ததாப்ரதிபத்தியும் நடக்குமாகில் அபுருஷார்த்தமாயிருக்கும். ஆகவேதான் ஆளவந்தார் * भवन्तमेवानुचरन्निरन्तरं प्रशान्तनिःशेषमनोरथान्तरः। कदाऽहमैकान्तिक नित्यकिङ्करः प्रहर्षयिष्यामि सनाथजीवितः ॥ * என்றருளிச் செய்தது. இவ்விடத்து ஸ்தோத்ரபாஷ்யத்தில்—"प्रहर्षयिष्यामि—त्वद्दासभूतस्य मे त्वत्प्रहर्ष एव प्रधानं प्रयोजनमिति भावः; एवं स्वाधीन स्वार्थकर्तृत्वभोक्तृत्व-भ्रमरहितकैङ्कर्यप्रार्थना कृता भवति।" என்று ஸ்வாமி தாமருளிச் செய்ததும் இங்கே அநுஸந்தேயம். பட்டரும் நமச்சப்தார்த்தமாக प्रबलतरविरोधिप्रहाणम् என்றருளிச் செய்ததுங் காண்க. இதிலே அவித்யாதிகளும் கழியுண்ணு மென்கையாலே "எல்லாக் களையறவு" என்றதும்

மிகப் பொருத்தம். எண்ணினம்—ஆக இவ்வர்த்தங்களை யெல்லாம் த்வயத்தின் பூர்வோத்தர கண்டங்களின் அர்த்தமாக அநுஸந்தித்தோமென்றபடி. ... ... (34)

திருமா லடியிணை சோந்து திகழ்ந்த வடிமைபெறத்
திருநாரணன்சரண் தின்சரணுகத் துணிந்தடைவோர்
ஒருநா ளுரைக்க வுயிர்தரு மந்திர மோதியநாம்
வருநாள் பழுதற்று வாழும் வகையதில் மன்னுவமே. (35)

திருமாலின் திருவடியிணையை யடைந்து சிறந்த கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தைப் பெறுதற்கு ஸ்ரீமந்நாராயண சரணங்களையே திடமான வுபாயமாக விச்வஸித்துப்பற்றின நம் ஆசாரியர்கள்—ஆத்மோஜ்ஜீவனத்தைத் தருமதான த்வயமந்த்ரத்தை ஒருநாளிலே நமக்கு உபதேசிக்க, அநுச்சாரணக்ரமத்தாலே அதை க்ரஹித்த நாம் இனி பவிஷ்யத்தான காலத்திலே ப்ராமாதிகபாபங்கூட நேராதபடி வாழும் வகையிலே ஊற்றங்கொண்டிருப்போமாக. [நீங்கள் ஊற்றங்கொண்டிருக்கக் கடவீர்களென்று பரோபதேசத்திலே நோக்கு.] ... (35)

மற்றோர்பற்றின்றி வந்தடைந்தார்க் கெல்லாம்
குற்ற மறியாத கோவலனுர் —முற்றும்
வினைவிடுத்து விண்ணவரோ டொன்ற விரைகின்றார்
நினைவுடைத்தாய் நீமனமே நில்லு. (36)

மற்றொருபுகலற்றுத் தன்னைவந்து பணிந்தார் திறத்திலே வத்ஸலனுய், அந்த வாத்ஸல்யத்தைப் பசுக்களின் பின்னே திரிந்து பெருக்கிக்கொண்டவனை பெருமான் நம்முடைய ஸர்வ பாபங்களையு மொழித்து நித்யஸூரி கோஷ்டியிலே நம்மைச் சேர்க்க விரைகின்றான்; நெஞ்சே! நீ இதுதன்னையே சிந்தித்துச் சோகமற்றிருப்பாயாக. [இத்தால் சரமச்லோகார்த்தத்தை ஸமுதாயரூபேண அநுஸந்தித்தபடி.] ... ... ... (36)

எல்லாத் தருமமு மென்னை யிகழ்ந்திடத் தானிகழாது
எல்லாந் தனதென வெல்லா முகந்தருள் தந்தபிரான்
மல்லார் மதக்களி றெுத்த வினைத்திரள் மாய்ப்பனென்ற
சொல்லா லினியொரு காற்சோகி யாத்துணி வுற்றனமே. (37)

ஆமுஷ்மிக பல ஸாதனங்களான ஸகல தர்மங்களும் அவற்றை யநுஷ்டிக்க ப்ராப்தியற்ற என்னையிகழ்ந்து கைவிட்டுவிடவும் ஸர்வேச்வரன் என்னை வெறுத்துத் தள்ளிவிடாமல் எல்லாப் பொறுப்புகளையும் தன்னுடையனவாகக் கொண்டிருப்பவனுகையாலே ஸகல பலன்களையும் நமக்கு அருள் செய்யாநின்றான்; அன்னவனுடைய "அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்ற வாக்யத்தினுல் இனி யொருநாளும் சோகிக்க வேண்டாதபடி துணிவு பெற்றோம். மல்லார் மதக்களிறெுத்த வினைத்திரள் மாய்ப்பன்—மிடுக்குடைய மத யானை போன்ற பாபராசிகளைத் தொலைத்திடுவேன் என்கை. இவ்விஷயம் எம்பெருமானுடைய சொல்லில் இல்லையாகிலும் திருவுள்ளத்திலுள்ளதேயென்க. ... ... (37)

வினைத்திரள் மாற்றிய வேதியர் தந்தருள் வாசகத்தால்
அனைத்து மறிந்தபி னும் பயனு மெனவடைந்தோம்
மனத்தி லிருந்து மருந்தமு தாகிய மாதவனார்
நினைத்தல் மனத்தி லரிதாகி நின்றன நீள்கழலே. (38)

*இப்பாசுரம் கீழே முப்பதாவது பாசுரமாகவும் அவதரித்திருக்கையாலே ஏற்கெனவே இது உரை செய்யப்பட்டதாயிற்று. அங்கு தத்வத்ரய சுளகத்திற்காக அருளிச் செய்தபடி. இங்கு ரஹஸ்யத்ரய சுளகத்திற்காக அருளிச்செய்கிறபடி. கீழே முப்பத்து நான்காவது பாசுரம் இப்பிரபந்தத்தில் அருளிச் செய்யப்பட்டது போலவே மேல் த்வயச் சுருக்கின் முடிவிலும் அருளிச் செய்யப்படுவது போல் இதனைக் கொள்க.* ... ... (38)

எட்டிலா றிரண்டிலொன்றி லெங்குமா றியம்புவார்
விட்டவாறு பற்றுமாறு வீடுகண்டு மேவுவார்
சிட்டரான தேசுயர்ந்த தேசிகர்க் குயர்ந்துமேல்
எட்டுமூன்று மூடறுத்த தெந்தைமா லிரக்கமே. (39)

*[பாட்டின் முடிவிலுள்ள "எந்தைமாலிரக்கம்" என்பதை முன்னே கொண்டு கூட்டி.........* **எட்டு மூன்று மூடறுத்தது** *என்று யோஜிப்பது.] அஸ்மத் ஸ்வாமியான எம்பெருமானுடைய கருணை என்ன செய்ததென்றால், ஆசாரியர்களின் கருணையைக் காட்டிலும் உயர்ந்ததாகி நமக்கு ப்ரக்ருதி ஸம்பந்தத்தை யறுத்துக் கொடுத்தது. அந்த ஆசாரியர்கள் எப்படிப்பட்டவர்களென்னில், திருமந்த்ரம் த்வயம் சரமச்லோகம் ஆகிய எல்லா ரஹஸ்யங்களிலும் உபாயமே சொல்லப்பட்டிருப்பதாக உபதேசிக்குமவர்கள்; பின்னையும் எப்படிப்பட்டவர்களென்னில், நமக்கு அப்ராப்தமென்று தள்ளப்பட்ட பக்தியோகாதிகளான உபாயாந்தரங்களையும், ஸ்வரூபாநுரூப மென்று கொள்ளப்பட்ட சரணாகதியையும், இதன் பலனான மோக்ஷத்தையும் நன்கறிந்து மேவியிருப்பவர்கள். இன்னமும் ஜ்ஞாநாநுஷ்டாநஸம்பந்ந சிஷ்டாக்ரேஸரர்களாயும் மஹா தேஜஸ்விகளாயு மிருப்பர்கள். இப்படிப்பட்ட தேசிகருண்டு —* "**देशिकं भूणुरीप्सेत्**" *என்று ந்யாஸவிம்சதியில் நிரூபிக்கப்பட்ட லக்ஷணஸம்பந்நர்களான ஆசார்யர்கள். 'அவர்களுக்கு உயர்ந்து' என்றது அவர்களது கருணையைக்காட்டிலு மோங்கி யுயர்ந்து என்றபடி. அப்படி ஓங்கினது எது?— எந்தை மாலிரக்கம். எம்பெருமானுடைய க்ருபை உயர்ந்ததா? ஆசார்யனுடைய க்ருபை உயர்ந்ததா? என்று பார்க்குமளவில் ஆசார்யனுடைய க்ருபைதான் உயர்ந்தது என்னத் தட்டில்லை; ஈச்வரனுக்கு சேஷவஸ்துவை யுபகரித்தும் சேதநனுக்கு சேஷியை யுபகரித்தும் போருமவன் ஆசார்யனாகையாலே ஈச்வரத்வயமும் விபூதி சதுஷ்டயமு முண்டானால்தான் ஆசார்யனுக்கு ஸத்ருச ப்ரத்யுபகாரம் பண்ணலாவதென்று சொல்லும்படியாயிருந்தது. இங்ஙனேயாயிருக்கச் செய்தேயும் "உபகார்ய வஸ்து கௌரவத்தாலே ஆசார்யனிற்காட்டில் மிகவுமுபகாரகன் ஈச்வரன்" என்றும் அறுதியிடலாயிருந்தது. ஆசார்யன் உபகரித்த வஸ்துவையும் ஈச்வரன் உபகரித்த வஸ்துவையும் சீர்தூக்கிப் பார்த்தால், பந்தமோக்ஷங்களிரண்டுக்கும் ஹேதுவாயிருக்கிற ஈச்வரனை யுபகரித்த ஆசார்யனிற்காட்டிலும், மோக்ஷைக ஹேதுவான ஆசார்யனை யுபகரித்த ஈச்வரன் மிகச் சிறந்த உபகாரகனாகத் தேறுவன். அன்னவனுடைய திருவருளுக்குச் சிறப்புச் சொல்லி இப்பிரபந்தத்தை நிகமித்தாராயிற்று.*